உ

கணபதி துணை.

கந்தபுராணம் அசுரகாண்டம்

சூரபத்மனுக்கு

காசியர், மாயாதேவி, சுக்கிராசாரியர் செய்த

# உபதேசத்திரயம்.

இவை

தேவிகோட்டை

ஸ்ரீவன்றொண்டரவர்கள் மாணாக்கரு ளொருவராகிய

காரைக்குடி

ராம. சொ.

சொக்கலிங்கச் செட்டியாரவர்களால்

இயற்றப்பெற்று

ஷெ யூர்

அள. கரு. கருப்பஞ்செட்டியார்

அவர்களால்

மதுரை

ஸ்ரீஜ் ஞானசம்பந்த விலாஸப் பிரஸில்

அச்சிடப்பெற்றன.

துன்மதி௵ ஆடி௴

இந்நூலை இற்றைக்கு மூன்றுவருஷங்களுக்குமுன், சென்னை ம-ா-ா-ஸ்ரீ சதாசிவச்செட்டியாரவர்கள் அச்சிட்டுத்தருவதாக கைகையெழுத்துக்காப்பியும், நூறுரூபாயும், வாங்கிக்கொண்டு சொன்னபடி முடித்துத்தராமல், பதினாறுபக்கமாத்திரம் அச்சிட்டிருந்ததைப் பெரும் பிரயத்தினத்தின்மேற்றந்தார்கள். இதற்குள்ள செலவுகழித்து மிச்சத்தொகை தருவார்களென்று எதிர்பார்க்கப்படுகிறது.

இப்பதினாறு பக்கத்துக்குமேல் இந்நூல் பூர்த்தியாக ஸ்ரீஞானசம்பந்த விலாசப்பிரசில் அச்சிடப்பெற்றது.

இக்கந்தபுராணத்தினுண்மையிற்றெளிவுபெறாத சிலர், இத்தமிழிலுள்ளபடி வடமொழியிலுமுண்டோ இல்லையோ என்று சந்தேகித்தமைநோக்கி,உண்டென்று கண்டு தெளிதற்காக, அவ்வடமொழிச்சுலோகங்களும் அவசியம் வேண்டியனமாத்திரம் இந்நூலின் பின்புசேர்க்கப்பெற்றுள்ளன.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

## ஸ்ரீலஸ்ரீ அம்பலவநாவல ஞானசம்பந்த பராசக்தி ஸ்வாமிகள்.

பாதசேவை

பா. சிதம்பரநாதபிள்ளை இயற்றியது

|| ஸ்லோகம் ||

[illegible] | [illegible] ||
[illegible] | [illegible] || ௧ ||
[illegible] | [illegible] ||
[illegible] | [illegible] || ௨ ||
[illegible] | [illegible] ||
[illegible] | [illegible] || ௩ ||

### ஆசிரிய விருத்தம்.

மாமேவு தமிழ்நாட்டின் மாண்புலவ ரெலாமுவந்து வாழ்த்துஞ் சீரோன்
பாமேவு பலகலையுண் முப்பொருணித் தியமென்னும் பண்பு தேர்ந்தோன்
தூமேவு சிவபூஜா துரந்தரனா வலர்கோமான் றுணைத்தாள் பூண்டோன்
காமேவு சோலைசெறி காரைநகர்ச் சொக்கலிங்கக் கவிவல் லோனே. (௧)

வடமொழியின் வியாசனெனத் தென்மொழியிற் புராணாதி வகுத்த வள்ளல்
தடையில்குண மாணவர்க்கு வித்தைபல வளித்தருளுந் தகைமை யாளன்
திடமுறவே தனையடைந்த வறிஞர்க்கும் வறியார்க்கும் செம்பொன்மேரு
திடமலைநேர் தண்ணிதியங் கவன்மகிமை செப்புதனந் தரத்த தாமோ. (௨)

பத்தியொடு படிப்பவர்க்குங் கேட்பவர்க்கு மிம்மையொடு பரமாநந்த
முத்திதரு முபதேசத் திரயமதைக் கத்தியமாய் மொழிந்துள்ளானா
லுத்தமமா மிந்நூலுக் குண்மைநிக மாகமமே யுயர்ந்த சான்றா
மித்தகுநூல் கலைமடந்தை மணிமார்பிற் காரமென விலங்கு மன்றே. (௩)

கவிஞர்புக ழிந்நூலைக் காரையிற்கற் பகவிலா சந்தான் கண்டு
சிவமிலக வாழ்கருப்பஞ் செட்டியா ரெனும்பெயராற் றித்தித் தூறுஞ்
சுவைமிகுநற் கரும்பெனுமின் சொல்லொடருள் கொடைப்பெருமை துலக்
[illegible] முதல்சம் பந்தவிலா சத்தினிலச் சிடுவித்துத் தந்தானன்றே. [குஞ்சீமான்

சுபம்.

கணபதி துணை

## கந்தபுராணம் அசுரகாண்டம்.

சூரபத்மனுக்கு

காசிபர், மாயாதேவி, சுக்கிராசாரியர்

# உபதேசத்திரயம்.



## காசிபர் உபதேசம்,

சூரபத்மன், காசிபமகரிஷிக்கு மாயாதேவியினிடமாகப் பிறந்தவன். இவள், பின்னிகழவேண்டிய சிவாஞ்ஞையின் செயலுக்கு ஏதுவாகத், தன் பிதாவின் சொற்படி, அருந்தவம் புரியுங் காசிபர் தன்னிடத்தில் அதிகாமுகராதற்குரிய மாயா விகற்பங்கள் செய்து வசித்துப் புணர்ந்து, முதல் யாமத்திற் சூரபத்மனையும், இரண்டாம் யாமத்திற் சிங்கமுகாசுரனையும், மூன்றாம் யாமத்தில் தாரகாசுரனையும், நான்காம் யாமத்தில் அசமுகியையும் பெற்றாள். இவ்விருவர் வியர்ப்பினாலும், மேலும் பல ரூபங்கொண்டு புணர்ந்த புணர்ப்பினாலும், இரண்டிலக்கம் வீரர்கள் தோன்றினார்கள். தலைவனாகிய சூரபத்மன், வீரர்களைத் தூரத்தினிறுத்திவிட்டுச், சகோதரர்களுடன் பிதாமாதாக்களை வணங்கி, அடியேங்கள் செய்யவேண்டிய காரியம் இன்னதெனக்கூறி யருளுகவென்று வேண்டிக்கொண்டனன்.

அதுகேட்ட காசிபர், மைந்தர்களே, நீங்கள் அடையவேண்டிய உயிர்க்குறுதியாகிய ஒப்பற்ற உத்தம காரியத்தைத் தெரிவிக்கின்றேன் உற்றுக்கேளுங்கள் : அக்காரியம் நீங்கள்மூவரும் அருந்தவமார்க்கத்தை மேற்கொண்டு நிலைத்து நிற்றலாகும். அத்தவஞ்

செய்யும் கிரம மின்னதென்று வேதசிவாகமாதி மெய்ந்நூல் விதிப் படி கூறுவன் கேளுங்களென் றுபதேசிக்கத் தொடங்கினர். சிவ பக்தியாதி உத்தமகுணங்களானிறைவுற்ற பெரியோர்களால் ஆராய்ந்து நிச்சயிக்கப்பெற்ற பொருள்கள் மூன்றுள்ளன; இம்மூன்றும், அநாதி நித்தியங்களென்று வேதவேதாந்தசார சிவாகமாதி சிவ சாஸ்திரங்க ளெல்லாவற்றாலு மெடுத்தோதப்பெற்று வேறெவற்றாலும் அசைக்கப்பெறாது நிலைபெற்றுள்ளனவே. இம்மூன்றையும் அநாதிநித்திய சர்வவியாபகைக பரமபதியென்றும், அவ்வியாபகத்துள் வியாப்பியமாயுள்ள பசுக்களென்றும், அவற்றுட் கலந்து நிறைந்து வியாப்தியாயுள்ள பாசமென்றும், பெரியோர் வகுத்துக் கூறுவர்.

இம்மூன்றிற் பதிப்பொருள், சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங் களை யெப்பொழுதுஞ் செய்தருளுகின்ற நீலகண்டாதி திருவருளடையாளங்களமைந்த உமாபதியாகிய பரமசிவ னொருவனேயாம். இவ்வுண்மை வேதமெடுத்தோதும். விருப்பு வெறுப்பின்றி எக்காலமும் எவரிடத்தும் ஒரேபடித்தாயுள்ள அப்பரமபதியினது அபாரமகிமை இத்தன்மைத் தென்றுரைப்பதெவர்க்கு மரியதாகும். அவனே பரமபதி யென்று கூறும் அவ்வேதத்தாலும் அம்மகிமை இன்னதுதானென்று துணிந்துகூற முடியாது. அதனை நாமா கூற வல்லோம். ஆதலால், இம்மட்டில் நிறுத்தி இனிப்பசுவிலக்கணங் கூறுதுங் கேட்பாயாகவென்று மேலுங் காசிபர் கூறுகின்றார்.

மைந்தனே, பசுக்களோ அளவில்லாதன. அநாதியாயுள்ளன. அவை, ஆணவம் மாயை கன்மமென முப்பகுதியாயுள்ள பாசத்தாற் பந்திக்கப்பட்டுள்ளன. நல்வினை தீவினையாகிய கன்மமலவலியினால் நீக்கமின்றிப் பிறந்திறந்துழல்வன. அங்ஙனம் பிறத்தலும் ஒரேயிடத்தில் நிலைத்துப் பிறப்பனவல்ல. பிருதிவியாதி பஞ்சபூத நிலைகளிலும் தேவமானுட மிருகபக்ஷியாதி சரீரிகளாய்ப் பிறப்பன.*

* இதனை, "அண்டசஞ் சுவேதசங்க ளுற்பிச்சஞ் சராயுசத்தோ,
டெண்டருநா லெண்பத்து நான்குநூ றாயிரத்தா
யுண்டுபல் யோனிதோறு முழன்றுமா னுடத்துதித்தல்
கண்டிடிற் கடலைக்கையா னீந்தினன் காரியங்காண்.
என்னும் பிரபல சுருதியாலும் காண்க.

அச்சரீரங்கள் பிறக்குமுன் கருவினுள்ளேயு மழியும், பிறந்தவுடனேயு மழியும், சிலநாளிருந்து மழியும், காளைப்பருவத்திலு மழியும், வயோதிகப்பருவத்திலு மழியுமாதலால் அதன் எல்லை சொல்லமுடியாது. * இப்படியே பிறந்திறக்கின்ற சீவர் தொகை எண்ணிலகப்படாதனவாம். † சாஸ்திர ஞானமும் கல்வியும் வீரமும் பெருஞ்செல்வமும் சரீரவலியும் மற்றும் இளமை முதலியனவும், நீர்க்குமிழிபோல நிலையில்லாதனவேயாகுமன்றி நிலையுள்ளனவென்று நினைக்கவுங்கூடுமோ. ‡ இவைகள் நிலையில்லாதன வாகலின் இவற்றைப்பற்றி வாஞ்சித்தொழுகுதலின்றி நிலையுள்ள பொருளைப்பற்றியே ஒழுகல் வேண்டுமென்ப தொருதலை நிலையுடைப்பொருள் யாதெனில்? தருமமேயாம். என்றும் நிலைநின்று கேடில்லாத இம்மையின்பம் மறுமையின்பங்களைப்பிரயாசையின்றி எளிதிற் கொடுப்பதாகும். அத்தருமமோ கவர்படுதலின்றி ஒருமையான மனமுள்ள உத்தமர்கள் தேட்டத்தால் வந்து கைகூடுகின்ற அரியபொருளாகும். அங்ஙனம் ஒருப்பட்ட மனமுள்ளவர்களுக்கல்லது மற்றையோர்களாலறிதற்கு முடியாததாகும். || அத்தருமத்தையே பேணிச்செய்து

---

* இதனை, "கருவினுளழிவதாயுங் கழிந்தபினழிவதாயும்
பரிணமித்தழிவதாயும் பாலனாயழிவதாயுந்
தருணனாயழிவதாயுந் தானரைத்தழிவதாயு
முருவவேயழிவதானா லுள்ளபோதே பாருய்ய."
என்னும் பிரபல சுருதியானுங் காண்க.

† பிறந்தநாள் மேலும் பிறக்குநாள் போலுந், துறந்தார் துறவார்தொகை.

‡ நீரிற்குமிழியிளமை நிறைசெல்வ
நீரிற்சுருட்டு நெடுந்திரைகள்—நீரி
லெழுத்தாகும் யாக்கை நமரங்காளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று.

என்பது முதலிய ஆப்த வாக்கியங்களுங்கூறும். நிலையிலாப் பொருள்களுடன் சாஸ்திரஞானத்தையு முடன்கூறினர். அது அனுபவமின்றி வாசாமாத்திர சாஸ்திரஞானத்தைப் போலும்.

|| இதனை, "அதிகநல்லற நிற்பதென்றறிந்தனையறத்து
ளதிகமாஞ் சிவபுண்ணியஞ் சிவார்ச்சனையவற்று
ளதிகமாஞ் சிவபூசையு ளடியவர்பூசை
யதிகமென்றறிந் தன்பரையருச்சனை செய்வாய்.
என்னுஞ் சிவவாக்கினாலுங்காண்க.

வந்தால், அத்தகைய உத்தமச் செய்கையாற் சிவனன்புவந்து பொருந்தும். அதனாற்றிருவருள் கைகூடும். * ஒப்புயர் வில்லாத சிவனன்புந் திருவருளுங் கிடைக்கப்பெற்றவழிச், சரியைகிரியாதி அருந்தவப் பெருமை வந்தெய்தும். அதன்மேல், அவ்வருந்தவ முதிர்ச்சியினுய சிவஞானத்தா லுண்மை தெளிந்த ஆத்மா, பரமாத்மாவாகிய சிவபாதநீழலிலிரண்டறக்கலந் தனுபவித்தலாகிய சுத்தாத்துவித நித்தியானந்தப் பெரும்பேறு பெற்றுவாழும். †

பெறுதற்கரிய இப்பெருவாழ்வு பெற்றவுடனே, முன் இதற்குத் தடையாயிருந்த வினைப்பிறவியும், அநாதிபந்தமாகிய பாசவலியும், அசேஷமாய் நீங்கிவிடும். இப்பிரதிபந்த நீக்கத்தால், மேற்காட்டிய மீண்டுவாரா வழிப்பேரின்பத்தை யனுபவிக்கும். அத்தன்மை யின்னதென்று எவராலு மெடுத்துக்கூறுதற்கியைவதன்று. ‡ இப்பெரு வாழ்விற்குக் காரணமாகிய சிவசரியை சிவகிரியை சிவயோகம் சிவஞானத் திருத்தொண்டென்னு மாதவமே மிகுவலியுள்ளது. இதுவன்றி இதுபோல்வது வேறொன்றில்லை. உயிர்க்குறுதி பெறுதற்கின்றியமையாத முக்கியகாரிய மெதுவென்று பேணிச்செய்யப் புகுந்தால், மனம் வாக்குக்கெட்டாத சிவகதியாகிய பேரின்பப் பெருவாழ்வைத் தருவதிதுவாதலால், இத்தகைய உத்தமமாகிய அருந்தவத்தையே உயிரினும் பேணிச்செய்யவேண்டும். அத்தகைய அருந்தவம், பிறப்புமுற்று நீக்கிப் பரமுத்தியைக் கொடுத்தல் மாத்திரமன்றி, இம்மையிலடையவேண்டி இஷ்டகாமி

---

* இதனை, "அருளென்னுமன்பீன் குழவி"—என்னுந் தேவசுருதியாற் காண்க.

† இதனை, "புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும் புகன்மிருதிவழியுழன்றும் புகலுமாச்சிரம, வறத்துறைகளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைகள் பலதெளிந்து மாரணநூல்படித்துஞ், சிறப்புடைய புராணங்களுணர்ந்தும் வேதசிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றூற்சைவத், திறத்தடைவரிதிற் சரியை கிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்."

என்னும் பிரபலசுருதியாதிகளாற் காண்க.

‡ இதனை, ஆட்பாலவர்க்கருளும் வண்ணமுமாதி மாண்புங், கேட்பான் புகிலளவில்லை.

என்னுந் திராவிட சுருதிகளாற் காண்க.

யங்களையும் கொடுக்கும். ஆதலாற் பன்னாட்செய்யுமருந்தவமே, இம்மை மறுமை யிரண்டுபலனையுங் கொடுத்தற்குரிய காரணமாகும். இதனால், மோக்ஷ காமிகள் மாத்திரமன்றி, இம்மைப்பயன் கருதிய போககாமிகளுந் தவஞ் செய்தே பெறவேண்டுமென்பது விளக்கமாம். தவமே இருமையின்பமுங் கொடுக்குமென்றதனால், அத்தவமே கர்த்தா வென்று மலையற்க. அத்தவத்தின் மென்மைவன்மையாதி தெரிந்து, அவ்வவ்வளவான பயனைக்கொடுத்தருளுஞ் சர்வகர்த்தா சர்வஞ்ஞ சர்வசக்தித்துவாதி சாட்குண்ணிய பரமபதியாகிய பரமசிவனே யாமென்ப. எனவே, தவத்தால் இருமையின்பமும் பெறுதல் அப்பரம சிவாஞ்ஞையின்படியன்றி வேறில்லை யென்பது துணிவாம். இதனால் சிவாஞ்ஞையின்படி யாவுமாகுமென்று தவத்திற் பராமுகஞ்செய்யற்க. தவத்தினளவு கண்டு தான் பரமனருள் செய்வனாதலால், யாவரும் உயிர்க்குறுதி பயப்பது தவமே யெனக் கொண்டு செய்யவேண்டு மென்பதே துணிபு. * இதனை, ஒருவன் செய்த வேலையினளவுகண்டு கூலிகொடுக்குந் தலைவனில் வைத்துணர்ந்துகொள்க; சிலர், மனசைப் புலன் வழிப்புகவிடாது ஒருவழிப்படுத்தி இவ்வருந்தவஞ் செய்து பிறரடைதற்கரிய முத்திபெற்றார். சிலர், செல்வப்பெருக்கினாலாய இம்மை யின்பம்பெற்றார். சிலர், இம்மை மறுமை யிரண்டினு மின்பம் பெற்றார். தேவசரீரிகளாய் மேன்மேல் விளங்குஞ் சுவர்க்காதிபதவிகளில் அரசிருந்து வாழுகின்ற இந்திராதி தேவர்களெல்லாரும், சரீரவலி மனவலி ஞானவலியாதியுடையராய் நெடுநாள் உடல் வருந்த அருந்தவஞ் செய்தவர்களல்லவா? நாம் சொல்லவேண்டுமோ? நீங்கள் அறியீர்களா? இடையறாத சிவபக்தி மேற்கொண்டு, சிவசரியாதிக்கிரம முதிர்ச்சியாற் கிடைக்கப்பெற்ற சிவஞானத் திருத்தொண்டாகிய செயற்கருந்தவம் புரிந்து, இம்மை மறுமை யிருமையுங் கடந்தே, மெய்ம்மைப்பேறாகிய சிவனடி நீழலிலிரண்டறக்கலக்கும் பேரின்பம் நுகர்ந்து வாழுகின்றவர்களை இவ்வளவினரென்றிசைத்த லெவர்க்குமரிதே. பிரமவிஷ்ணுவாதி தேவர்கள் தங்களியல்புக்குத் தக்க தவம் புரிந்து, இருமைஇன்பமும் பெற்று வாழுகின்றவர்களே. இவ்

* தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லார்,
அவஞ்செய்வா ராசையுட்பட்டு, என்னுந் தேவசுருதியாற் காண்க.

வாறு தமக்கியன்றளவு தவஞ்செய்து மேன்மையுறுதலை முழுது மறந்து, சிவகாருணியமின்றிக், கொலையாதி பாதகவழிப்பட்டுப் பிறர்க்கிடர் செய்யும் பாவிகளுக்கு, இம்மை மறுமை இரண்டிடத் துஞ் சுகலேசமுமில்லை. அவர்கள், மேலுமேலுந்திய பிறவிகளிற் பிறந்து நீங்காத துன்பசாகரத் தழுந்துவார்கள். அவர்கள் செய்கைக்குத் தக்கபலனிவைகளே யென்பதைச் சிவசாஸ்திர மூலமாகத் தெரிந்து பெரியோர்கள் அவர்களிடத்துள்ள இரக்கத்தால் விளங்கக்கூறினும், அப்பாவிகள் கொலை களவு முதலிய பாவங்களையே விரும்பிச் செய்யுமயக்க நீங்கிப் பிரபஞ்ச வெறுப்புற்றுத் தலைமேற்கொள்ளார்கள். அதனால் துன்ப நீங்காதவர்களாய்ப் பிறந்துழல்வதேயன்றி முத்திநிலைக்கருகாராவ தொருக்காலுமில்லை. மேற்கூறியபடி தவத்துக்கு மேலா யொருபொருளுமில்லை. அதனை ஒத்ததாகவும் வேறொன்றில்லை. அதைக்காட்டிலும் அருமையான பொருளுமில்லை. அதற்கு அதுவே ஒப்பாகும்.

ஆதலால், மைந்தர்களே! அத்தகைய அரிய தவத்தையே செய்வீர்களாக. அதற்குரிய நற்செயல்களே யன்றித் தீச்செயல்கள் சிறிதுமுங்களை யணுகாமல் விலக்கிவிடுங்கள். அவ்வாறு தீமை நீக்கி நன்மை மேற்கொண்டு நீங்கள் செய்யுந்தவமும், பிறப்பிறப்புட்பட்ட மற்றத் தேவர்களை நோக்கிச்செய்து அற்ப பிரயோசனம் பெற்றுப் பின்பு இழக்கலுற்று வருந்தாமல், பிறப்பிறப்பாதி சிவகுணஞ் சிறிதுமின்றி என்றும் ஒரேபடியாய்ச், சர்வகர்த்தாவாய் விளங்கும் பரமசிவனையே இடைவிடாத்தியானத்துடன் செய்வீர்களாக. இவ்வரிய தவமேயன்றி நீங்கள் செய்யத்தக்கது வேறொன்றுமில்லை. உடம்பை வருத்தி அருந்தவஞ் செய்பவர்கள் உலகத்தாரெல்லாரும் வியந்து பாராட்ட வாழ்வர். தம்மை யடுத்தவர்களைக் கைவிடாது காக்கும் வலியுடையராவர். எத்துணைப் பெரும் பகைவர்களையும் வென்று செயம்பெறுவர். எதை விரும்பினும் விரும்பிய பொருளெல்லாம் உடனே கைகூடப்பெறுவர். எப்போதும் அழியாது நித்தியராய் வாழ்வர். மைந்தர்களே, அருந்தவம் புரிவார்க்கு இவ்வளவுங் கைகூடுமென்று நான் உங்களுக்குக் கூறியது உண்மையே யென்று உங்கள் மனந்திடப்படும்படி ஒரு திவ்

வியசரித்திரஞ் சொல்வேன் கேளுங்களென்று அவர்களை உன்முகப் படுத்திக்கொண்டு, மார்க்கண்டேய சரித்திரத்தை விஸ்தாரமாகக் கூறி, இந்த மார்க்கண்டேயர், தாம் செய்த அருந்தவத்தினாலல்ல வா, எவராலுங் கடக்கமுடியாத ஆயுளெல்லையாகிய விதியையுங் கடந்து, எவ்வுலகத்தும் எக்காலத்துந் தவறுபடாத இயமன் வல்ல பத்தையுங்கடந்து எப்போதும் நித்தியராய் வாழ்கின்றார். இது சத்தியமேயாகும். இனி நீங்கள் செய்யவேண்டிய தவக்கிரமத் தைக் கூறுவன் கேளுங்களென்று காசிபமுனிவர் மேலுஞ் சொல் லத் தொடங்கினர்.

## இனி மாயாதேவி யுபதேசம்.

காசிபர் சொல்லத்தொடங்கியபோது, மாயை நகைத்துக்கூறு கின்றாள். வேதசிவாகமாதி சிவசாஸ்திர முற்றுணர்ந்த முனிவரே! நீர் இப்பொழுது நமது புத்திரர்களுக்குச், சிவசாஸ்திரங்களினுண் மைப்பொருளாயும், மலசம்பந்திகளாகிய ஆத்மாக்க ளடையவேண் டிய உறுதிப்பொருளாயுமுள்ள உபதேசமே செய்தருளினீர். இவ் வுபதேசம், இகபோக விருப்பநீங்கி மோக்ஷ விருப்பமுள்ள பரிபாகி களுக்குச் செய்யவேண்டியதன்றி, இப்பொழுது நாமிருவருங்கூடிப் பெற்ற இச்சிறுவர்களுக்கு இவ்வரிய வுபதேசஞ் செய்வது பொருத் தமன்று: நம்மிடத்தன்புள்ள நம்மாலபிமானிக்கப்பட்ட இச்சிறுவர் கள் பருவத்திற்கிசையப் பெருஞ்செல்வமும், யாரையும் வெல்லும் வெற்றியும், இகபோகவின்பமும், தீர்க்காயுளும், பெருங்கீர்த்தி யும், தவறுபடாத வாழ்க்கையும் ஆகிய இவைகளை இப்பொழுது பெறவேண்டியவர்கள். ஆதலால் இப்பொருள்களை விரைவிற் பெறுதற்குரிய வழியைப் பிரியத்தோடு உபதேசித்தருளுக வென்று கூறினள். அதுகேட்ட முனிவர், பெண்ணே உன் எண்ணம் இப்படி இருக்கின்றதா? ஆனல், அச்சிறுவர்களுக்கு ஆகத்தக்கன இவைதா னென்றெண்ணிய உன் கருத்தின்படி, அவைகளைப் பெறுதற்குரிய வியல்பை நீயே கூறுவாயாக வென்றனர். (எனவே அக்கருத்து

அவர்க்குடன்பா டன்றென்பது விளக்கமாகின்றது.) அவ்வாறு முனிவர் கூறியது கேட்ட மாயாதேவி, சூரபத்மன் முதலிய தன் புத்திரர்களைப்பார்த்து, மைந்தர்களே! உங்கள் தந்தையாகிய அதி பரிசுத்த மகாமுனிவர் இப்பொழுது உங்களுக்குபதேசித்த எல்லா மும், சிவசாஸ்திர சம்மதமாகிய உண்மைப் பொருள்களேயாம். ஆயினும் அவைகள் உங்கள் பாலப்பருவத்திற்கு ஆவனவன்று. ஆதலால், உங்கள் பருவநோக்கி உங்களுக்காகத்தக்கன இவைதா னென்று கூறுகின்றாள்.

மைந்தர்காள்! சீவர் யாவர்க்கும் பிறப்பெடுத்ததனு லடைய வேண்டிய மாட்சிமையுள்ள பிரயோசனம், கல்வி செல்வம் இரண்டி னும் மேம்படுவதைக் காட்டிலும் மேலான தொன்றுமில்லை செல்வப் பொருளும் தீதில்லாத கல்விப்பொருளுமாகிய இவ்விரண் டில் ஒன்றேனும் பெறாது விடுவரேல், அவர்கள் உயர்பிறப்பை யடைந்திருந்தாலும், அப்பிறப்பைக் காட்டிலும் பேயின் பிறப்பு மிகப் பெருமையுடையதாகும். சரீரமெடுத்துப் பிறந்த சீவர்களுக் குப்பெருமையைக் கொடுப்பனவாகிய செல்வம் கல்வி இரண்டிலும் தாரதம்மியத்தை யறிந்தவர்கள் ஆராய்வரேல், அரிய கல்வியைக் காட்டிலும் செல்வமே சிறந்ததென்று செப்பலாகும். அது எத னாலென்றால், பன்னெடுங்காலம் நூல்களெல்லாம் இடையறாது கற் றவராயினு மிக்க வறுமையாற் பொருளற்றவரானால், அப்பொருளை விரும்பிப் பகைவர்களையும் பணிந்து நிற்பாராதலாலென்க. அளவிடு தற்கரிய அக்கல்வி முதலிய ஆக்கங்கள் எல்லாவற்றையும் கொள் ளப்படுந்தன்மையினின்றும் குறைவுறாதபடி விருத்திசெய்தலாலும், மேன்மைபொருந்தச்சிறப்புச்செய்தலாலும், அப்பெருஞ்செல்வமே மேலானதென்க. நூற்பொருள்களை நுணுகியாராய்ந் நுண்மையறிவு டைய பெரியராயினும், மேற்கூறிய மேன்மைபெற்றசெல்வத்துடன் பொருந்தாரெனில், அவர்களை உலகிலுள்ளவர் குற்றத்துக்கிடமான இழிந்தவகையில் வைத்தெண்ணுவார்கள். இத்தகையபெருஞ்செல் வமானது அளவிடுதற்கரிய மகிமையுள்ள கல்வி கேள்விகளானும் வித்தியா மேன்மையையுங் கைகூடச்செய்யும். அதுவன்றியும் பற்

பல மேன்மைகளையும், மனசினால் இன்ன இன்ன தருமங்கள் செய்ய வேண்டுமென்று நினைத்தால் நினைத்தபடி அத்தருமங்களையும், அதனாலாய உயர்வான கீர்த்தியையும், பகையைத் தடிந்துகொள்ளப்படுகின்ற வெற்றியையும், மற்றுமுள்ள நன்மைகளையுங் கைகூடச்செய்யுமாதலால், அச்செல்வத்தைக் காட்டிலும் மேலான பொருள் வேறில்லை.* அச்செல்வத்தைப் பெறவேண்டுமானால், அதனைச் சம்பாதிக்கும் முயற்சித்தொழிலை ஊக்கமாய்ச் செய்வரேல், கிடைக்கப் பெறுவார்கள். அதுவும் விடாமுயற்சியாகத் தளராது நிலை நின்று செய்வரேல் பெருஞ்செல்வம் விரைவின் வந்துசேரும். அச்செல்வ வளம் பலவகைப்படும். அவையெல்லாம் ஒருங்கு சேர்வது துர்லபம். அவை முழுதும் நீங்களே பெறுவதற்கு உரிய சிந்தனையை மேற்கொள்ளுங்கள். உய்யும்வழி இதுவன்றி வேறில்லை. நீங்கள் பெறவேண்டிய உறுதிப்பொருள் இதுவேயாகும். தேவர் யாவரும் உங்களுக்குப் பகைவர்கள். அவர்களூம் விடாமுயற்சி வலியினால்

* மாயாதேவி, தன் புதல்வர்க்குப் பிதாவுபதேசம் பின்னாகுகவென்று நிறுத்திவிட்டுத் தற்காலம் அவர்க்கு வேண்டியது செல்வமேயென மனங்கொண்டு, அதனை யீட்டுதற்குரிய யுத்திபுத்தி விளக்கஞ் செய்வது கல்வியாகுமென்று அதனையுமுடனாக்கிப் புதல்வர்களே, நீங்கள் பெறவேண்டிய பொருள் கல்வி செல்வங்களே யென்றுபதேசித்து, அச்செல்வஞ்சம்பாதிக்கும் விஷயத்தில் அவர்கள் மனம் அதிக ஊக்கமுறவேண்டிச் செல்வமே சிறந்ததென்று பலகாரணங்காட்டி விளக்குமிடத்து, இச்செல்வமானது, வித்தியாபிவிருத்தி முதலிய தருமங்களையும், கீர்த்தி வெற்றி முதலியவைகளையும், அச்செல்வமுள்ளார்க்குச் சேர்த்து வைத்தலாற் சிறந்ததென்று கூறிய இதனால், இவைகளைச் சேர்த்து வைக்காவிடில் அச்செல்வஞ் சிறந்ததாகாதென்பது விளக்கமாகி, இச்செல்வம் அநித்தியமாயினும், வித்தியாபிவிருத்தி தருமமுதலியவைகளையும் வளர்த்தற்கு ஏதுவாயிருத்தலாற்றான் சிறந்ததென்பதுந் தெளிவாகின்றது. ஆகவே, செல்வர்கள், தங்கள் வருவாய்க்குத் தக்கபடி வித்தியாபிவிருத்தி முதலிய உத்தம தருமங்களை அத்தியாவசியம் செய்யவேண்டு மென்பதும், அதைப் பராமுகஞ் செய்வரேல் அச்செல்வம் படைத்தபயனைச் சிறிதும் பெறார்களென்பதும், அவ்வாறு தருமஞ் செய்யப்பெறாத அச்செல்வத்துக்கும் சிறப்பில்லை யென்பதும் துணியப்

ருன் மேன்மேற் பதவிகளில் அதிகாரத்தலைமை பெற்று வாழ்கி றார்கள். நீங்கள் அவர்களினும் மேலாந்தலைமை பெறுவீர்கள். அதற்குரிய பெருஞ் செல்வத்தைப் பெறத்தக்க முயற்சியைச் செய்யுங்கள். அம்முயற்சிவகையை நானே உங்களுக்குச் சொல் கின்றேன். இவ்விடம் ஆலந்தீவெனப் பேர்பெறும். இதற்கு நேர் வடக்கிலுள்ள பூமிதான் அசுரர்களாகிய நீங்கள் தவஞ்செய்யத்தக்க பூமியாகும். இந்தச்சைனியங்களோடு அங்குச்சென்று யாககுண் டமும் அதற்குரிய மற்ற அங்கங்களும் அமைத்து, விஷத்தன்மை பொருந்திய சமித்துக்களிட்டு அக்கினியையெழுப்பி அவ்வாறே இர த்தமாமிசாதிகளால் ஆகுதிசெய்து குரூர யாகத்தைச் செய்யுங்கள். அப்படிச்செய்யுமிடத்து, பிரம்மவிஷ்ணுவாதி சமஸ்த தேவரும், எங்கள் நாயகனென்று வணங்குங் கங்காதர பரமபதியாகிய பரமசிவ னையே இடையறாது மனம் வாக்குக்காயங்களால் வழிபாடு செய்து கொண்டு செய்யுங்கள். இவ்வாறு பரமசிவனை இறுகப்பற்றிநின்று இந்தக்கொடிய யாகத்தைச் சிறிதும் நழுவவிடாது செய்வீர்களா னால், அத்தகைய நீலகண்ட தேவநாயகனாகிய பரமசிவன், நீங்கள் விரும்பிய வரங்களெல்லாமும் இம்மையிலேயே பெற்றுவாழும்படி அருளுவார். இவ்விதமாக யாகத்தைச்செய்தற்கு நீக்கள் முன்குறித்த அவ்விடத்துக்குச் சென்றபொழுதே அதற்கு வேண்டும் பொரு ளெலாம் வகை வகையாக நானே சேகரித்துத் தருவேன் என்று கூறி, அவ்விதயாகஞ் செய்தற்குரிய மந்திரதந்திர கிரியாபாவனாதி

பெறும். தருமஞ் செய்யப்பெறாத செல்வத்துக்கே சிறப்பில்லையானால், கள்ளு, காமம், சூது, கொலை முதலிய பாதகங்களுக்கு உபயோகப்படும் பொருளினியல்லை விரிப்பானேன். அப்பொருள் உபயோகப்படும் வழி நோக்கிப் பாதகத்தால் வந்த பாதகப்பொருளேயன்றி வேறல்ல. நீதிதவறாது தருமவழியாகச் சம்பாதித்த நற்பொருள்தான் மேற்கூறிய நற்காரியங் களுக்கு உபயோகப்படுமாதலால் செல்வர்கள் பொருளைத் தருமவழியாகச் சம்பாதித்துத் தருமவழியில் உபயோகித்து அதனை நற்பொருளென்று யாவருங்கூறும்படிச் செய்யவேண்டியதே அவசியமென்பது, மாயாதேவி தன் புத்திரர்களுக்கு மாறிக் கூறப்புகுந்த இடத்தும் விளக்கமாதலைத் தெளி வாராக.

கள் எல்லாமும் உபதேசித்தாள்.

அவ்வுபதேசம் பெற்ற சூரன், பிதா மாதாக்களை வணங்கி விடைபெற்றுக் கொண்டு செல்லும்போது, தம்பியரிருவரையும் நோக்கி நீங்கள் சேனைகளுக்கு முன்னும் பின்னுங் காவலாக வாருங் களென்று ஆஞ்ஞாபிக்க, அப்படியே தாரகன் பின்னும் சிங்கமுகன் முன்னுமாக காவலாய் வரச்சேனைகள் சென்றன. செல்லும்போதே, தேவர் முனிவர் முதலிய யாவரும் நடுங்கினார்கள்.

---

## இனிச் சுக்கிராசாரியர் உபதேசம்.

அப்போது, அசுரகுல குருவாகிய சுக்கிராசாரியரும், அச் சேனையுள்ளே போதற்குப் பயந்து யாவரையும் வசீகரிக்கத்தக்க ஒருவசிய மந்திரஞ் செபித்துக் கொண்டு சென்று சூரனைக்கண்டார். உடனே சூரன் மிக்க விருப்பத்துடன் உபசாரங்கள் கூறி, நீர் யாரென்று கேட்க, நான் உங்கள் குலங்களுக்கெல்லாம் ஆசாரியன், உனக்கு அவசியமான உறுதி ஒன்று கூறுதற்கு வந்தேனென்று கூறச் சூரன் வணங்கி நிற்பச் சுக்கிராசாரியர் சிவபிரானது திருவருள் வழியை முன்னிட்டுச் சூரனே நீ இப்பொழுது ஆக்கம் பெறக் கருதித் தவஞ்செய்தற்குச் செல்கின்றாயல்லவா? தவஞ் செய்யு மிடத்துப் பகைவர்கள் அதற்கிடையூறு செய்வர்கள். அது உன்னி டம் வாராதபடி யுனக்கு நான் கூறுவதொன்றுண்டென்று கூறி

மொய்கெழு கூற்றை வென்ற முதல்வன்மந் திரத்தை நல்கி
வைகலு மிதனை யுன்னி மனத்தொடு புலனொன் றாக்கிப்
பொய்கொலை களவு காமம் புன்மைக ளுறுமே போற்றிச்
செய்குதி தவத்தை யென்னாச் செவியறி வுறுத்தல் செய்தான்.

இயமனைக் கடந்த பரமசிவமந்திர மொன்றை அதற்குரிய முறைப் படியுபதேசித்து, இத்திருமந்திரத்தை நாடோறும் செபித்துக் கொண்டு, பொய் கொலை, களவு காமம் முதலிய பாதகவகழிளிற்

சிறிதுஞ் செல்லாமல், மனசை ஒரு வழிப்படுத்தி நின்று தவஞ் செய்கவென்று ஆசீர்வதித்தார்.

சூரன், மேலும் ஆசாரியனை வணங்கிக் கொண்டு குறித்த இடத்திற்சென்று, அதிவிஸ்தாரமாக யாகசாலை முதலிய அமைத்து அருந்தவம் புரிந்து, சிவபிரானிடத்து அளவிலாதவரம் பெற்றுக் கொண்டு, அங்கு நின்று நீங்கித் தம்பியரிருவருடன் சைனியஞ் சூழத்தன் பிதாவாகிய காசிபமுனிவரிடம் வந்து வணங்கி, அஞ் சலித்து நின்று, பரமசிவனிடத்திற் பெற்றவரத்தின் பெருக்கமெல் லாம் கூறி, இனிமேல் நாங்கள் செய்யத் தக்கவைகள் எவை என்று கேட்டான். அதனைக்கேட்ட காசிபர்,

“தந்தை கேட்டுச் சதமகன் வாழ்வினுக்
கந்த மாகிய தோவண்ட ருக்கிடர்
வந்த தோவெம் மறைநெறி போனதோ
வெந்தை யாரரு ளித்திற மோவெனா.

உன்னி யுள்ளத் துணர்வுறு காசிபன்
றன்னின் வந்த தனயரை நோக்கியே
முன்னை நுங்கள் முதற்குரு பார்க்கவ
னன்ன வன்க ணடைகுதி ரன்பினீர்.

அடைதி ரேயெனி னன்னவ னுங்களுக்
கிடைப ருவங்கை யித்திரு மல்குற
நடைகொள் புந்தி நவின்றிடு நன்றெனா
விடைபு ரிந்து விடுத்தனன் மேலையோன்.

இந்திரன் முதலிய தேவர்களுக்கெல்லாம் இடர்வந்து விட்ட தோ? வைதிகசைவ மார்க்கங்களுக்குத் தாழ்வு வந்துவிட்டதோ? இதுவும் சிவபிரான் றிருவருட் சம்மதமோ? வென்று மனசில் நினைத் துக்கொண்டு, புத்திரர்களை நோக்கி யுங்கள் அசுரகுல குருவாகிய சுக்கிராசாரியரை யடையுங்கள்; அடைந்தால் அவர் உங்களுக்கு இச் செல்வம் விருத்தியாகும் வழி கூறுவரென்று கூறி அனுப்பினார்.

(இதனை) வடமொழிப் புராணம், "காச்யபஸ்து விசிந்த்யாத தேவாநாம் விபதந்ததா" என்ற வாக்கியாதிகளால் விளக்குகின்றது. இக்காசிபர் தேவர்களுடைய விபத்துக்களை நன்றாகச் சிந்தித்து என்ற இச்சுருக்கத்தையே தமிழ்ப்புராணம், இந்திராதி தேவர்க்கெல்லாம் இடர்வந்ததோ? வைதிகசைவ மார்க்கத்துக்குத் தாழ்வுவந்ததோ? இதுவுந்திருவருட் சம்மதமோ? என்று நினைத்து, என்பதாகவிரித்துக் கூறி, இதனால் காசிபர் மனசிலுள்ள அனுதாபத்தை விளக்கியது. அங்ஙனம் விரித்தற்கு "விசிந்தியாத" என்ற வாக்கியமும் "தேவாநாம் விபதந்ததா" என்ற வாக்கியமும் இடந்தந்து நிற்றலையும், வந்ததோ வந்ததோ என்ற வினாக்களாற் காசிபரது அனுதாபம் விளக்கும் அழகையும், மேலுமத் தமிழ்த்தொடையிலுள்ள சிறப்புக்களையும் அவ்விருமொழியினுந் தேர்ச்சியுள்ள அறிஞர்கள் நன்கு தெரிந்து சிலாகிப்பார்கள். ஆகவே, ஈண்டுக்கூறிய தமிழ்ப்புராணமும் வடமொழிப்புராணத்தின் மூலசுலோகத்தில் விரித்தற் கிடமிருந்தே விரித்துக்கூறிய தென்பதும், விரிக்கினும் இரண்டுந் தாற்பரியத்தால் ஒத்தனவென்பதும், அவ்வடமொழியைக் காட்டிலுந் தமிழ்மொழியில் அநுதாப விளக்க முதலிய நயங்களுள்ளன வென்பதும், ஸ்தாலிபுலாக ஞாயம்பற்றி மற்றிடங்களுமிப்படியே யாமென்பதும், இனி விரிந்தனவற்றைச் சுருக்கி விளங்குமிடங்களும் ஆங்காங்குள்ள நயம்பற்றியே யென்பதும், இதுவேயுமன்றி எனைத்தமிழ்மொழி பெயர்ப்பு நூல்களினுமுள்ள சுருக்கவிரிவு முதலியனவும் ஒவ்வோர் நயம்பற்றியே யுள்ளனவென்பதும் தெளிவாகுமென்க. இந்நயங்களை உற்றுநோக்கு முணர்விலார் சிலர் மூலசுலோகம்போல மொழிபெயர்ப்பில்லையென்று குறைகூறி மனம்போன போக்கிலேசென்று நிந்தனையுஞ்செய்து நிரயத்துக்காளாவார். அது, "கேளாம் புறன்" என்றபடி அதிகாரத்தொதுக்கற்பாற்றன்றி வேறில்லையென்க.

காசிபமுனிவரால் அனுப்பப்பட்ட சூரன் தம்பியருடன் சேனை சூழச்சுக்கிராசாரியரிடம் வர, ஆசாரியர் எதிர்வந்தழைத் துபசரித்துத் தமது ஆச்சிரமத்துட்புகும்போது, சூரன் தன்சேனைகளைக் காத்

றக்கொண்டிருக்கும்படி தாரகனை நிறுத்திவிட்டுச், சிங்கன் தன்னுடன்வர உட்சென்றனன். ஆசாரியர் அவர்களுக்கு ஆசனங்கொடுத்திருக்கச்செய்து நீங்கள் வந்த காரியம் யாதென்றுகேட்கச், சூரன் யாகஞ்செய்ததும் பரமசிவன் வந்து பெருஞ்செல்வமுதலிய பற்பல வரங்கள் தந்ததும் அவற்றைப் பெற்றுக்கொண்டு காசிபரிடஞ் சென்றதும் அவர்கூறியதுமாகிய எல்லாமுஞ்சொல்லி, இனிமேல் நாங்கள் செய்வேண்டிய நீதிமார்க்கமின்னதென்று கூறியருளுகவென்று வேண்டினன். இந்தச்சூரன் பிறரெவராலுஞ் செய்தற்கரிய அருந்தவம்புரிந்து சிவானுக்கிரகத்தால் எவர்க்குங்கிடைத்தற்கரிய பெருஞ்செல்வமுதலிய சகல வளங்களும் நிறையப்பெற்று, அளவுகடந்த பலவானுயிருந்தும், பெரியார் சொற்படி நடத்தலே உசிதமெனக்கொண்டு, பிதாவைவணங்கி இனி நாங்கள்செய்வதென்னென்றுகேட்டு, அவர் வாக்கைச்சிரமேற்கொண்டு சுக்ராசாரியரிடம் வந்தபின்னும் நாங்கள் செய்யவேண்டிய நீதியைக்கூறியருளுகவென்றேகேட்டானுதலால், அவன்மனசு நீதியிலே நிலைத்துள்ளதென்பது யாவருக்கும் விளக்கமே. அங்ஙனமாகவும், சுக்கிராசாரியர் அச்சூரனுக்குத் துர்ப்புத்தி யுபதேசித்தாராதலின் அவரைத் " நீதுசான்மனத் தேசிகன் கூறுவான் " என்று நூலாசிரியர் கூறினர். வடமொழிப் புராணமும் அத்தியாய வரிசை தெரிவிக்குமிடத்து " சுக்ரேண சூராய துர்ப்புத்தி யுபதேச: " சுக்கிரனல் சூரனுக்குத் துர்ப்புத்தி யுபதேசிக்கப்படு மத்தியாயமென்று விளக்குகின்றது.

இதனை, ஒருபாற்கோடாது நடுநிலைநின்று நோக்கும் பெரியார் சூரனுக்குச் சுக்கிரர் உபதேசித்தது பின்னிகழ்ச்சி நோக்கிக்கூறியதன்றி, அப்போது அந்தச்சூரனல்லாமல் வேறு யாராவது மேற்கொண்டு நடக்கத்தக்க சற்காரிய மல்லவென்ப துள்ளபடி யுணர்ந்துரைப்பார்கள்.

மேற் சூரன் வேண்டிக்கொண்டது கேட்ட சுக்கிராசாரியர், வாசாய் சூரபத்மனே, உலகத்திலே அநேகர்கள் பதிபசுபாசமென்னும் மூன்று பொருளும் அநாதிநித்தியமா யுள்ளன வென்பார்கள்; அப்படிக்கூறுவது அவர்களறியாமையாலன்றி வேறில்லை; அது தப்பு

வார்த்தையேயாகும். யதார்த்தங் கூறுகின்றேன் நீ உற்றுக்கேட்பாயாக. பாசமென்றொரு பொருளேயில்லை. அங்ஙனமாகவும் உண்டென்பதும், அநாதியென்பதும், பொய்யேயாகும். இனிப்பசுவும் பதியுமென்றிரண்டு பொருளில்லை. இரண்டும் ஒரே பொருள் தான். அது பிரமமெனப்படும். பிரமமொன்றொழிய வேறு பொருள் யாதுமில்லை. இதுதான் உண்மை. இவ்வுண்மையை உற்றுநோக்குமுணர்வில்லாமல் மேலும். தீவினை நல்வினையென வினைகளிரண்டுள்ளனவென்றும், அவ்வினை காரணமாகப் பசுக்களாகிய சீவர் யாவர்க்கும் பிறவி வந்து கூடுமென்றும், அப்பிறவியில் இன்ப துன்பங்களையடைவரென்றும், அங்ஙனமடையுங்கால் ஒன்றை மாத்திரமன்றி இன்ப துன்பமிரண்டையும் ஊழின் முறைப்படி கலந்து அநுபவிப்பரென்றும், அநுபவிக்கும்போதே மேலும் பிறத்தற்கேதுவாகவினைகளைச் செய்வரென்றும், இப்படியே மேலுமேலுஞ் சம்பாதிக்கின்ற வினைவலியினாலே மேலுமேலும் விரைந்து பிறந்திறந்துழல்கின்ற துன்பத்திற் பொருந்துந் தன்மையைப் பதியாகிய பரமசிவனறிந்து, அவ்வினைப் போகங்களைப் புசிப்பித்துத் தொலைத்தற்காக வினைக்குத் தக்கபடி சரீராதிகளைக் கொடுத்தியக்குவனென்றும், மேற்கூறிய முதல்வனாகிய பதியும் பாசபந்தியாகிய சீவனும் ஒரு பொருளல்லவென்றும், ஒன்றென்று கூறினால் அம்முதல்வனாகிய பதிக்கு அபகரிஷம் கூறிய சிவாபசார மாகுமென்றுங் கூறுவார்கள்.

இவ்வாறு கூறுதல், அறியாமைக் குணத்தாலன்றி வேறில்லையென்பதற்குரிய வரலாறு கூறுகின்றேன் கேட்பாயாகவென்று சுக்கிராசாரியர் துர்ப்புத்தி கூறுகின்றார். சூரனே, ஆதியந்தமின்றி நிர்மல சுயம்பிரகாச சொரூபியாயுள்ள பிரமம் விளையாட்டின் கண்ணே விருப்பங் கொண்டு தனது மாயையினாலே பஞ்சபூதாதிகளை உண்டாக்கும். அவ்வாறு அதிவிசாலமாகிய மாயையினாலே பூத சம்பந்த சரீராதிகளை யுண்டாக்கி, மகாகாசம் குடங்களிலே கலந்து நிற்றல்போல அப்பிரமம் அச்சரீரங்களிலே கலந்து நின்று, அக்குடங்களுடையுங்கால் மகாகாசமுள்ளபடி விளங்கல் போலச் சரீரங்களழியும்போது முன்னுள்ளபடி நிலைபெற்று விளங்கும். இப்படியே

யெப்போதும் ஒன்றேயாய் நித்தியமாயுள்ள பிரமமே விளையாடலைச் செய்துகொண்டிருக்கு மாதலால், மேற்கூறிய நல்வினை தீவினை களும், மெய்வாய் கண் மூக்குச் செவியாகிய பொறி முதலியவை களும் வேறில்லை, பொய்யேயாகும். இனித் தீவினைகளை நீக்கி நல் வினையே செய்து பரம்பரையிலடைபப்பெறு மோக்ஷ மொன்றுண் டென்பதும் பொய்யேயாகும்.

பொறி முதலியனவே பொய்யானால், அவைகளாற் காணப் படும் பொருள்கள் மெய்யாகுமா? அவைகளும் பொய்யேயாம். அவைகளே பொய்யானால் அவைகளையுண்டென நினைத்தற்குரிய மனமுதலிய கரணங்களும், வாக்கு முதலிய கர்மேந்திரியங்களும், சரீரங்களும், செய்யுஞ் செயல்களும் மெய்யாகுமா? எல்லாம் பொய்யேயன்றி வேறில்லை. அச்செயல்கள் பொய்யாகுமேல், நல் வினை தீவினைகளும் அவற்றால் வரும் இன்பதுன்பங்களும் மெய் யாகுமா? மேற்கூறியபடி பிரமமொன்றொழிய எல்லாம் பொய்யே யாமென்று துணிவாயாக.

இப்பொய்ப் பொருள்களை, ஒருவாறு மயங்கி மெய்யெனக் கொண்டாலும், அப்பொய்யாகிய இன்ப துன்பங்கள் பொய்யாகிய சரீரங்களுக்குள்ளன வேயன்றி, நிர்மல பிரமத்தைச் சேருமோ? இல்லை யாதலாற் பிறத்தலு மிறத்தலும் பற்பலவாய்த் தொழில் களைச் செய்தலு முதலிய எல்லாமும் சர்வவியாபக பரப்பிரமத்துக் கொரு சிறிதுமில்லை. நன்றாக யோசிக்குமிடத்து அவை யெல்லா முடலுக்குள்ள சுபாவமே. போதல் வருதலும், ஆதல் அழிதலும், மற்றுந் தொழில்களும், அளவில்லாத குடங்கள்தோறும் நிறைந் துள்ள ஆகாசத்துக் குண்டாகுமா? அது போல ஒரே பொருளாய் எங்கு நிறைந்து நிற்கின்ற பிரமத்துக்கு மேற்கூறிய போக்கு வரத்து முதலியவேறுபாடு சிறிது மில்லை. என்றும் ஒரே படித்தாயுள்ள தாகும். நிலைபெற்ற முடிவாயுள்ள இதனையே உண்மையென்று கொள்வாயாக.

இனி இதற்கு விரோதமாய்ச் சிலர்கள் மேன்மேற் செல்லுதற் குப் பற்றுக் கோடாயுள்ள தருமம் நன்மை தருவதென்று நினைந்து

செய்வதும் பாவந்தீமைதருமென்று அஞ்சிச்செய்யாதொழிவதும் அறிவின்மையேயாம் எதுசேர்ந்தாலும் அதனை இதுநன்மை இதுதீமை என்றுயோசிக்காமல் அவையெல்லாம் மாயாகாரியமாகிய பொய்யேயென்று துணிந்துசெய்வதே நீதிமார்க்கமாகும். தருமங்களையேசெய்க. பாவங்களைச்செய்யாதொழிக. என்று கூறுகின்றவர்கள் புத்தியில்லாதவர்களே. புண்ணியமோபாவமோயார் யெதைச்செய்தாலுஞ்செய்தவர்கட்கு வரத்தக்கபயன் ஒன்றுமில்லை. அப்புண்ணிய பாவங்கள் மெய்யாயிருந்தாலல்லவா அவற்றாலாகும் பலனும்மெய்யாய்வரும், அவைகளே பொய்யாகும்பொழுது பலன் எப்படிமெய்யாவரும்? பொய்யானது விதையாப் முளைத்துப் பலன் தருவதுண்டோ? கனவில்வந்த இன்பமும் துன்பமும் விழித்தபோது நாம் கண்டிலேமன்றே! அதுபோல நாம் இப்பொழுதுசெய்யும் புண்ணியபாவச்செயலெல்லாம் பின்பு பலனுக்கு வாராதென்பதுதெளிக. இம்மையிற்செய்யும் புண்ணியபாவப்பலன் மறுமை என்று ஒன்று வந்தாலல்லவா அங்கு அனுபவிக்கப்படும். அப்புண்ணிய பாவம் பொய்யேயானால் அப்பொய்யில் மெய்யாய் ஒருபலன்வருமோ?

இந்த நன்மார்க்க நிலைமையெல்லாம் பிறருள்ளபடி அறிவாராயின், அப்போதே நாம் அடைந்துள்ள நன்னிலைமை முழுதும் பெறுவர். உறுதியுண்டென்று உள்ளபடி நம்பினல் இவையெல்லாம் உண்மையேயாகும். சிலரைச் சிறியரென்றும் சிலரைப்பெரியரென்றும் அவரவர் செயல்நோக்கி நாம் நினைப்பது குணமல்ல. நித்தியமாகிய உயிரெல்லாம் நித்தியமாகிய பிரமம் ஒன்றேயென்றறிதல்வேண்டும். அதுவே உண்மையாகும். ஞானிகளால் நிச்சயிக்கத்தக்க அதிநுட்பமிதுவேயாகும். ஆதலால்இதுவரையுங் கூறியவெல்லாமும் உண்மையாகியவுறுதியேயென்று கடைப்பிடிப்பாயாக. இனி உங்களுக்காக வேண்டிய சகல வளப்பங்களும் உங்கள் குலசம்பந்தமாகத் தொன்றுதொட்ட வழக்கங்களும் திடமாகக்கூறுவேன் கேட்பாயாகவென்று சுக்கிராசாரியர் மேலுங்கூறுகின்றார்.

வாராய் சூரபத்மனே, பிரமவிஷ்ணுவாதி தேவர்களைக்காட்டிலும் மிகமேலாகிய ராஜத்துவமும், அதற்கேற்ற வீரமும், வெற்றியும்,

ஆணையும், குறையாத பெருஞ்செல்வமும், உன்னிடத்திருக்கின்றன. எவற்றாலுங் குறைவின்றி எல்லாவற்றாலு மேன்மையுற்றிருத்தலை யாராய்ந்து உன்னை நீ பிரமமென்றே நிச்சயித்துத்தெளிவாயாக. மற்றைய பிரமாதிதேவர்களை உன்னைக்காட்டிலும் மேலோரென்று பற்றி அவர்களுக்கு வணக்கமுதலியன செய்யற்க. அத்தேவரெல்லாம் உங்களுக்குப் பகைவர்கள். ஆதலால் அவர்களுடைய ஐசுவரியங்களையும்கெடுத்து அதிசீக்கிரத்தில் தண்டித்தலையுஞ் செய்வாயாக.

இந்திர னென்பேரன் வானோர்க் கிறையவ னவனே றென்னல்
அந்தமி லவுணர் தங்க ளாருயிர் கொண்டா னன்னோன்
உய்ந்தனன் போகா வண்ண மொல்லையி லவனைப் பற்றி
மைந்துறு நிகளஞ்சேர்த்தி வன்சிறை புரிதி மாதோ

அத்தேவர்க்கெல்லாம் அரசனாவான் இந்திரனென்பவன், அவன் இதற்குமுன் உங்கள்குலத்தசுரர்கள் பற்பலரையுங்கொன்றொழித்தான். ஆதலால் அவனைத்தப்பிப்போகாதபடி அதிசீக்கிரத்தில் பிடித்துவந்து வலிய விலங்குமாட்டிக் கொடியசிறையில் வைப்பாயாக.

சிறையினை யிழைத்துச் செய்யுந் தீயன பலவுஞ் செய்து
மறைபுகல் முனிவர் தம்மை வானவர் தம்மைத் திக்கின்
இறையவர் தம்மை நாளு மேவல்கொண் டிடுதி யன்னோர்
உறைதரு பதங்க ளெல்லா முதவுதி யவுணர்க் கம்மா.

அவ்வாறு இந்திரனைச் சிறையில்வைத்து உன்னாற்செய்யத்தக்க தீமைகள் பலவுஞ்செய்து, வேதாதி சாஸ்திரங்களையுணர்ந்த முனிவர்களையும் மற்றைத்திக்குப் பாலகர்முதலிய தேவர்களையும் தினந்தோறும் உன் ஏவற்காரர்களாகக்கொண்டு அத்தேவர்கள் வசித்த அவரவர்பதவிகளை அசுரர்களுக்குக்கொடுத்து அவர்களையே அவ்வவ்வரசர்களாக வாழச்செய்வாயாக.

கொலையொடு களவு காமங் குறித்திடு வஞ்ச மெல்லாம்
நிலையெனப் புரிதி யற்றா னினக்குமேல் வருந்தீ தொன்றும்
இலையவை செய்தி டாயே லிறைவமீ திரும்பிற தெல்லாம்
உலகிடை யொருங்கு நண்ணு வணக்கெவர் வெருவு நீரார்.

கொலை, களவு, காமம், கள்ளு, சூது, வஞ்சம் முதலிய வெல்லா வற்றையும் எப்போதும் தவறாமல் நிலைமையாகச்செய்வாயாக, அவை களால் உனக்குப்பின் வருந்திமை யாதொன்றுமில்லை. கொலை, களவு காமாதி தீயகாரியஞ்செய்தல் பாதகம் என்று நினையாதே. அவைகள் செய்யாது விடுவாயேல் நீவிரும்பியவைகளெல்லாம் இவ்வுலகில் உனக்கு ஒருமிக்க வந்துசேரா. அன்றியும் உன்னுடைய வீரம் வெற்றி செல்வமுதலிய பெருக்கத்தைநோக்கி ஒருவரும் அஞ்சமாட்டார்கள். எத்தனை பெருக்கமிருந்தாலும் காட்டினாற்றான் உலகம்பயப்படும். ஆதலால் மேற்கூறிய கொலையாதி காரியங்கள் அவசியம் செய்வாயாக. நாம் உரைத்த இவையெல்லாம் உறுதியெனக் கடைப்பிடித்து அப்படியே நடந்து நீ சிவாநுக்கிரகத்தாற் பெற்ற ஆயிரத்தெட்டு அண்டங்கள் ஒவ்வொன்றிலும் சேனைகளோடு சென்று, அங்குள்ளனவெல்லாங்கண்டு அங்கங்கே உனது ஆணையை நிறுத்தி வைத்துவிட்டு மீண்டு இங்குவந்து அரசுவீற்றிருந்து வாழ்வாயாக வென்றுபதேசித்தார்.

இவ்வுபதேசம் சுக்கிராசாரியர் உள்ளபடி கருத்துக்கொண்டுகூறியதல்ல. தேவர்யாவரும் * யாகபதி பரமசிவனே என்னுஞ்சுருதிக்கு விரோதமாகத் தக்கன் பரமசிவனை விலக்கிச்செய்தயாகத்துக்குச் சென்றதும், அவியுண்டதும், சிவநிந்தனைகளைக்கேட்டுக்கொண்டிருந்ததுமாகிய பெருஞ்சிவத்துரோக முள்ளவர்களாதலால், அச்சிவத்துரோகம் அப்போதுசெய்த வீரபத்திர தண்டனையால் முழுதும்நீங்காமல் சேஷமிருத்தலால், அது விருத்திப்பட்டு அவர்கட்குப்பெருந்துன்பஞ் செய்யுமென்றிரக்கங்கொண்ட பரமசிவாக்ஞையால் அவர்கள் சூரன் முதலியோரால் கஷ்டப்பட்டு அச்சிவத்துரோகம் முழுதும் நீங்கி உய்யவேண்டிய நிமித்தம் இவ்வாறு உபதேசித்த தன்றிவேறில்லை. இதனை, மேருப்படலம்.

மெய்ம்மைய தகன்றதக்கன் வேள்வியி னிருந்த பாவம்
நும்மிடை யிருந்த தற்றோ னுதக வுழந்தீர் மேனாள்

* விச்சுவமென் றெடுத்தியம்ப விளங்குவானொரு முகுந்தன்
விச்சுவத்திற்கதிகனென விளங்குவான் பரமசிவன்
எச்சமென யாவர்களு மியம்புவார் மாயவனை
எச்சவதி பதிசிவனென் றெடுத்தியம்பு மெம்மறையும்.

நம்மிடை யொருசேய் வந்து நணுகி வெஞ் சூரைக் காதி
யிம்மென வும்மைக் காப்ப னெனப்புகன் றிறைவன் போனன்.

என்ற (௩௫)வது திருவிருத்தத்தில் இந்திரனுக்குப் பரமசிவன் கூறியதனுலும், பின்பு இந்திரன் பிரமதேவரிடஞ்சென்று உபாயங் கேட்டகாலத்தில்.

படர்மதி மிலைச்சுஞ் சென்னிப் பகவனு ருயிர்க ளெல்லாம்
அடுவதும் வருத்தந் தீர்க்கு மாரரு ளான வாபோற்
கொடியவெஞ் சூரன் றன்னைக் கொண்டெமக் கலக்கண் செய்கை
விடலரும் பவப்பே ரூர்த்தி வீடருள் கருணை யன்றே.

என்ற (சச)வது திருவிருத்தத்திற் பிரமதேவர் கூறியதனுலும் பின்பு இந்திரனுடன் பிரமதேவர் விஷ்ணுவை யடைந்து நிகழ்ச்சி கூறி வேண்டியபோது.

ஊழ்வினை நெறியான் முன்ன மொருபெரு வேள்வி யாற்றித்
தாழ்வினை யடைந்த தக்கன் றன்புடை யிருந்தோர் தம்பாற்
சூழ்வினை யெச்ச முற்று மருத்தியே தொலைத்துத் தொல்லை
வாழ்வினை யருள நாதன் மனத்திடை நினைந்தா னன்றே.

சூரெனு மவுணர்க் காற்றல் புரிந்ததுஞ் சுரர்கள் யாருஞ்
சார்வருந் திறத்தா லீசன் றவத்தருக் குணர்வு காட்டி
யாருயி ரெவைக்கு மின்ன லாக்கிய வாறுந் தூக்கிற்
பேருண் முறையே யன்றிப் பிறிதொரு செயலு மன்றால்.

என்ற திருவிருத்தங்களில் விஷ்ணுமூர்த்தி கூறியதனுலும தெளிவாய்க் காணலாம்.

அப்படியானல், சுக்கிராசாரியர், தேவர்க்குத் துன்பஞ்செய்ய வேண்டியமட்டில் சூரனுக்கு உபதேசிக்கவேண்டியது அவசியமே. அம்மட்டிலமையாது, மேலும் பலவிரித்துக்கூறியது, முடிவிற்கூறிய தேவர்க்கிடர்செய்விக்கும் விஷயத்தில், அச்சூரன்மனந்துணிவுபெறு தற்கேயாம். இப்படி அவன்மனதை வரிசைக்கிரமமாக லேசுலேசாச் சரிப்படுத்திக்கொண்டுவந்து முடிவிற் கூருமல், எடுத்தவுடனே உத் தேசித்த விஷயஞ்சொன்னல், அச்சூரன்முதலில் காசிபர் உபதேசத்

தால் சன்மார்க்கத்தில் மனஞ்செல்றவனாதலால், நிரபராதிகளாகிய தேவர்களுக்கு நாம் இடர்செய்வது ஞாயவிரோதமென்று மறுக்கக்கூடும். அதற்குமாத்திரம் சமாதானமாக, தேவர்கள் உங்களுக்குப் பகைவர்களாதலால அவர்களை நீ தண்டிக்கவேண்டியதவசியமென்று கூறினாலும், அவர்கள் அதிக்கிரமித்து நம்மோடெதிர்த்து வாராமலடங்கிக்கிடக்கும்போது அவர்களை மேலுந் தண்டிப்பது முறையல்லவென்று மறுக்கக்கூடும். இப்படியே மேலுமேலும் மறுப்புநிகழாமல்அவன்மனந்துணிந்து சமாதானமாகும்படி அதிவிஸ்தாரமாகக்கூறினார்.

அவர்கூறியபடி சூரன் மனந்துணிந்ததற்கு முக்கியகாரணம், தேவராதியோர்க்குக்கஷ்டஞ்செய்ததினால் வரும்பாதகம் யாதுமில்லையென்பதேயாம். பாவஞ்செய்தலால் துன்பம்வருவதில்லை யென்பதை நிலைநிறுத்தற்பொருட்டுப் புண்ணியஞ்செய்தலாலின்பம் வருவதில்லையென்றுடன்கூறினார். புண்ணியபாவங்களால் இன்பதுன்பமில்லை என்பதை நிலைநிறுத்தற்பொருட்டு அவற்றைச்செய்கின்றசிவனென்றொரு பொருளில்லை யென்றுகூறினார். உலகமெங்கும் சராசர சரீரங்கடோறுஞ் சிவவிளக்கமுஞ் செயலுமிருத்தலாற் சிவனில்லையென்பது தவறாகுமென்று ஆக்ஷேபியாமற் பொருட்டுப், பிரமமொன்றே சரீரந்தோறுங் கலந்து நிற்றலால் செயல்கள் நிகழ்கின்றன. நிகழினும் அவையெல்லாம் முடிவிற் பொய்யேயாகும். அதுபலகுடங்களிற் கலந்துநிற்கும் ஆகாசத்துக்கு எப்படியாதொரு செயலுமில்லையோ அதுபோலாம். நன்மைப்படுதலும் தீமைப்படுதலும் எப்படிக்குடங்களுக்கேயுள்ளனவோ, அதுபோலச் சுகப்படுதலுந்துக்கப்படுதலும்சரீரங்களுக்கேயுள்ளனவாம். ஆதலால் சுகதுக்கங்கள் பிரமத்திற்கில்லை. அப்பிரமமொன்றுதான் என்றுமுள்ளது. அதுவே சரீரந்தோறுங்கலந்துநிற்றலால் அச்சரீரியாகிய நீ அப்பிரமமேயன்றிவேறில்லை. ஆதலால் சரீரச்செயல்களாகிய பாவ புண்ணியங்கள் சரீரத்திலுள்ள பிரமமாகிய உனக்கில்லை யென்பது நிச்சயமே. என்றிவைபோல் வனவாகிய பற்பலவிஷயங்களை விரித்துக்காட்டி அச்சூரன்மனத்தை வசப்படுத்திச் சமாதானஞ்செய்தபடியால் அச்சூரன் தேவராதியோர்க்கு இடர்செய்யத்துணிந்தானன்றி வேறில்லை, இதனால்தீமைசெய்ய மன

ந்துணியாதவர்களை அது பாதகமல்லவென்று செய்யும்படி ஏவுதற்கு இவ்வுபதேசம் முக்கியகாரணமென்பது விளக்கமாகின்றது.

இதனைக்கொலையானது பாவமென்றுபயந்து வில்லையும் நழுவவிட்டுநின்ற அர்ச்சுனன் மனந்துணிதற்கு ஒருசொல்லாலன்றி அதிவிரிவாகக்கூறித்திருப்பிக் கொலைசெய்யும்படி ஏவியவிண்டு கீதையில்வைத்துநோக்கியுந் தெளியலாம்.*

இதுவன்றியு மீண்டுக்கூறிய சுக்கிராசாரியரே முன்னொடுபின் மாறுபடக்கூறிய மாறுபாட்டாலுந் தெளிவாய்க்காணலாம். அஃதாவது சுக்கிராசாரியர், சூரன்தவஞ்செய்யச்செல்லும்போது வலியவந்து தவத்துக்குப்பகைவராலிடர்வாராமற் காத்தற்காகச் சிலமந்திரமொன்றுபதேசித்து, இதனைக்கொலையாதி துர்ச்செயலின்றி ஒருப்பட்டமனசுடன் செயிப்பாயாகவென்று நற்புத்தியுபதேசித்தார். அதனை

மொய்கெழு கூற்றை வென்ற முதல்வன்மந் திரத்தை நல்கி
வைகலு மிதனை யுன்னி மனத்தொடு புலனொன் றுக்கிப்
பொய்கொலை களவுகாமம் புன்மைக ளுருமே போற்றிச்
செய்குதி தவத்தை யென்னச் செவியறி வுறுத்தல் செய்தான்.

என்ற திருவிருத்தம் விளக்குகின்றது.

அங்ஙனம் உபதேசித்த அவரே, பின்புதேவர்க்கிடர்செய்யும்படியேவுதற்காக உடுத்திக்கட்டி யுபதேசிக்கும்போது கொலையாதிகளைநிலையாகச் செய்யென்றுபதேசித்தார். அதனை

கொலையொடு களவு காமங் குறித்திடு வஞ்ச மெல்லாம்
நிலையெனப் புரிதி யற்று னினக்குமேல் வருவ தொன்றும்
இலையவை செய்தி டாயே லிறைவநீ விரும்பிற் றெல்லாம்
உலகிடை யொருங்குநண் ணு வுனக்கெவர் வெருவு நீரார்.

என்றசெய்யுள் விளக்குகின்றது. இப்படியே வடமொழிப்புரா

* பார்த்தனு ரிரத மேறிப் படைதனைப் பார்த்துச் சார்வைக்
கூர்த்தவம் பாலே லெய்து கொன்றர சாளே னென்னத்
தேர்த்தனி லிருந்து மாயஞ் செய்துமால் கொல்லச் செப்பும்
வார்த்தைநூ லாக்கிக் கொண்டாய் புரங்கொ ளுான் மதித்தி டாயே.

ணமுங் கூறுகின்றது. அந்த சுலோகங்களும் இந்நூனுட்காட்டியிரு த்தலாற் செவ்வேகண்டு தெளியலாம்.

இவ்வாறு சுக்கிராசாரியர் முன்னுக்குப்பின் மாறுகக்கூறியஉபா யத்தை உள்ளபடி உற்றுநோக்கினுல், நாமே பிரமமென்று வாயாற் கூறிவிட்டுப் பாவபுண்ணியாதி சுவர்க்க நரகாதிகளெல்லாம் பொய் யேயெனக்கொண்டு, "உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வை யத்,தலகையாய் வைக்கப்படும்" என்றதேவசுருதி "மாயாவாதி பே யாகி" மாயாவாதப் பேயாவுனக்குத், தேவரிலொருவருண்டாகி, மே வருநரகம் விடுப்பதோவரிதே." என்ற சித்தாந்த சுருதிமுதலியவை களுக்கேயிலக்காகிக்,காயக்கிலேசாதி நியமங்களின்றிக், குறித்தகால ங்களில் ஒரு நிமிஷமுந்தவருதுண்டுறங்கிச் சுகித்தலாதி சரீரபோஷ ணையிலேயே அதிஞாபகமாய் இன்னசாதியார்பாகஞ்செய்ததுதான் நமக்காகுமென்கின்ற வரம்புமின்றி இஷ்டப்படிதிரிதற்கிடந்தந்து.செ லுத்து மாயாவாத மார்க்கமானது இப்போதுசரீர சுகத்துக்குப்பொ ருத்தமானுலும், மேல்நோக்கிச் செல்லவிடாமல் அமிழ்த்திக் கொள் கின்ற மகாவஞ்சக மார்க்கமேயென்பதும் நாமே பிரமமென்று வாய் மதம் பேசுவது மகாசிவத்துரோகமே யாகுமென்பதும், நாமே பிரம மாயிருந்தால் நம்மிடத்தே சர்வாண்டங்களிலும் சர்வசீவர்களிடத்து நிகழ்வன வெல்லாவற்றையும் ஒருங்கேயறிகின்ற முற்றுணர்வாகிய சர்வஞ்ஞதாதி குணங்களிருக்கவேண்டுமே, அவற்றிலொரு லேசானு லேசமும் நம்மிடத்தில்லையே நாமோ ஒருவேளையன்னத்துக்கும் பிற ரை யெதிர்பார்த்துண்டு காலங்கழிக்கின்றுமே பிணியாதிகளாற் படு ந்துன்பங்கள் பேசவேண்டுமோ? அக்காலங்களில் நாமேபிரமமென்று சலியாதிருக்க முடியவில்லையே நமக்கு மேலொரு கடவுளுண்டெனக் கொண்டு வழிபடுதலாகிய மணிமந்திர மருந்துகளால் அப்பிணியாதி கள் நீங்கப்பெறுதல் நேரே காண்கின்றுமே. பிணியாதிகள் உணவா திகள் பிரமத்துக்குண்டா? ஓரணுமாத்திரமுமில்லையே. இத்தனை து ன்பங்களுட் கிடக்குமெனின்ற நாமே பிரமமென்பது சிவத்துரோகமல் லவா? என்பனவாதியாக மேலும் பலவகைகளாலாலோசித்துணர்ந்து நா ம்பிரமமல்ல நாம் வினைவசத்தாற் பிறந்திறந்துழல்கின்ற சீவர்களே

யென்று தெளிந்து கடவுள் வழிபாடுசெய்துய்யவேண்டியதே அத்தியாவசியமென்பதும், ஆனால் உணவாதி பிணியாதிகள் உடம்புக்குள்ளன வன்றி உயிருக்கில்லை யாதலால் அவ்வுணவு பிணியாலாகுமின்பதுன்பங்கள் உயிர்க்கில்லையெனில், அவ்வுணவுபிணியாதிகளுயிருள்ள உடம்புக்கன்றி உயிர்நீங்கிய உடம்புக்கில்லை யென்பது பிரத்தியக்ஷபாதலால் உணவுபிணியாதியால் இன்பதுன்பப்படுவ துயிரேயன்றி உடம்பன்று சடமாகிய உடம்பை நிலைக்களமாக்கொண்டு பாவபுண்ணியங்களாகிய வினைகளைச்செய்வது முயிரேயன்றிவேறில்லை யாதலால் அவ்வினைகளைச்செய்து இன்பதுன்பங்களை யனுபவிக்கின்ற உயிரைப் பிரமமென்று கூறுவது சிறிதும் பொருந்தாதென்பதும், ஆனால், சர்வசீவரிடத்தும் கலந்துநிற்கின்ற சிவன் அச்சீவர்செய்கின்ற வினைப்பயனாய இன்பதுன்பங்கள் தன்னைப்பீடியாது தாக்கற நிற்பனென்று சைவசித்தாந்தங் கூறுதல்போலச் சரீரங்களாற் செய்யப்படும்வினைப்பயன் அச்சரீரங்களுட் கலந்து நிற்கும் உயிரைப்பற்றுமென்று கூறுதல் பொருத்தமன்றோவெனில்? சரீரங்களோ அறிவிலாச்சடங்கள் சீவர்களோ அறிவுள்ளவர்கள். அவ்வறிவினாற் சரீரங்களில் முனைத்து நின்று அச்சீவர்களே வினைகளைச்செய்தலால் அவ்வினைப் பயன்களை, "அவரவர்வினையின் அவரவர்வருவார்" என்றபடி அச்சீவர்களே, அநுபவிப்பாரன்றி, ச்சடமாயசரீரங்கள் சீவனின்றித்தாமாக ஒருவினையைச்செய்தலும் அனுபவித்தலும் ஒருகாலுமில்லை யாதலால் அது பொருந்தாது என்பதும், அறிவுடைப்பொருளாகிய உயிர்க்கும் முற்றறிவுடைய சிவனுக்குமுள்ள பொருத்தம்போல அறிவில்லாத சடங்களாகியசரீரங்களுக்கும் அறிவுள்ளஉயிர்களுக்கும் அனுபவப்பொருத்தத்தை யொப்பிட்டுவினைப்பயன்களை உடம்புகளே அனுபவிக்கும் உயிர்களுக்கில்லையென்று கூறுவது அபத்தமேயாகுமென்பதும், இவ்வுண்மையை உள்ளபடி நோக்குமூழில்லாத மாயாவாதிகள் சிலர், வினையும்பயனும் உடம்புக்கேயன்றி யுயிர்க்கில்லை (பிரமத்துக்கில்லை) யென்னுந் துர்ப்போதமேகொண்டு, காமசுகபோசனாதிகளைத் தங்கள் மனம்போன போக்கிலே நின்று முறை கடந்தனுபவித்து, அந்தோ, இவ்விதபாதகங்கள் செய்பவராமோவென்று பயந்துவினவுவார்

க்கு, உங்களறியாமை யிருந்தவாறென்னே? நாம் ஒன்றுஞ்செய்ததில்லை, எல்லாம் உடம்பின்சேட்டையேயாம். அதனால் அவ்வுடம்பிற்கலந்துநிற்கும் பிரமமாகிய நமக்கு ஒருபாதகமும் வாராதென்று வெகுகெம்பீரமாக அதி உச்சாகத்துடன்கூறிப், பயந்து கேட்டவர்கள் மனசையும் இந்தப்பாதகவழியில் துணியச்செய்து கெடுத்துத் தாங்களுங்கெடுதல் மகாபாதக சிவத்துரோக மென்பதும், இவ்வாறு, எல்லாம் உடம்பின்செயலேயாம்; அவ்வுடம்பால்வரும் பாவபுண்ணியம் லாபநஷ்டம் மானாவமானாதிகளொன்றும் நமக்கில்லையென்று கூறுகின்றபடியிலும் நிலைத்தலில்லாமல், யாராவது இவர்கள் செய்யுந்துர்ச்செயல்கள் தவறென்று ஞாயமுகமாகப் பொதுப்படவிளக்கிப் பிறர் அந்தப்பாதக வழியிற்செல்லா தொழிகவென்று கூறினால், அதனைத்தமதெனக்கொண்டு, அதிகோபா வேசத்துடன் ஞாயவழிகடந்து நிந்தனையாதிகளைசெய்வது அறிவின்மையே என்பதும், சிவன், எல்லாவுயிர்களினுங் கலந்துநின்றாலும், அறிவுடைப் பொருளாகிய அவ்வுயிர்களே வினைகளைச்செய்தலால் செய்தவுயிர்களே அவ்வினைப்பயனாகிய இன்பதுன்பங்களை அனுபவிக்க, அச்சிவன் சாக்ஷிமாத்திர மாய்த்தாக்கற நிற்பனென்று சித்தாந்தங் கூறுவதுபொருத்தமே யென்பதும், தேகமே நான் இந்திரியமே நான் அந்தக்கரணமே நான் பிராணனே நான் என்பன வாதியாகக் கூறுகின்ற தேகான்மவாதம் இந்திரியான்மவாதம் அந்தக்கரணான்ம வாதம் பிராணான்ம வாதம் முதலியவைகளை உற்று நோக்கி, அத்தேகமுதலிய எல்லாமும் சடங்களே யாதலால் அவைகளை நாமென்றுகொள்வது சிறிதும் பொருந்தாது; அவையெல்லாம்நமக்குக் கீழ்ப்பட்டனவாய் நமது ஏவற் கருவிகளாயுள்ளனவே; நாம் அவைகளின் மேலாய் ஏவிநடாத்தும் அறிவுடைப் பொருளாகிய ஆன்மாவேயென்று அறிந்த மாத்திரத்திலே ஒரு உள்ளக்கிளர்ச்சியானகளிப்புண்டாகி(அதாவது,நாம் அறிவுடைப்பொருளாகிய சித்தாயிருந்தும் அதை மறந்து, சடங்களாகிய தேகாதிகளை நாமென்றிருந்த கீழான நிலையைக்கடந்து, நாம் சித்தென்பதை உள்ளபடியறிந்து மேலான நிலைக்குவந்து விட்டோமே யென்றெண்ணுதலாலுண்டாகிய ஒருசந்தோஷமே) அந்தக்களிப்பின் மேலீட்டினால், அச்சித்துப்பொருளோ எல்லாவற்றையும் ஒருங்கேயறியுஞ் சர்வஞ்ஞசித்தென்றும்

ஒன்றொன்றாக அறிவிக்க அறியுங்கிஞ்சிஞ்ஞசித்தென்றும் இரண்டுண்டென்றுவேதசிவாகமாதி சிவசாஸ்திரங்கூறுதலையாவது, அவற்றையுணர்ந்தபெரியோர்சொல்லுதலையாவது சாவகாசமாக வரன்முறையாகக்கேட்டுத்தெளிதற்கிடமில்லாமல், அக்களிப்பின் வசப்பட்டுநின்றமையால், நாம் நம்மைச்சித்தெனக்கண்டதுண்மைதான்; ஆனால் நாம் சர்வஞ்ஞசித்தா? கிஞ்சிஞ்ஞசித்தா? சர்வஞ்ஞசித்தானால் எல்லாவற்றையும் ஒருங்கேயறியும் முற்றறிவு நமக்கிருக்கவேண்டுமே; அஃதின்றி ஒருவர் அறிவிக்க ஒன்றொன்றாய் அறிகின்றோமாதலால் நாம்கிஞ்சிஞ்ஞசித்துத்தானே; இனிநாம் நமக்குக்கீழுள்ள எவற் கருவிகளாகிய இந்திரியாதிகளைச் சடப்பொருளெனக்கண்டு கழித்து மேலுக்குவந்தது போல, நமக்குமேலுள்ள சர்வஞ்ஞசித்தாகிய பரமசிவானுக்கிரகம்பெற்றுவாழுதற்குரிய வழியை விசாரித்து அவ்வழியினின்று வாழவேண்டியதே நமக்கு முக்கியமான கடமையல்லவாவென்றுமேல் நோக்கிச்செல்லவேண்டியதை மறந்து, நாமேசர்வஞ்ஞசித்தாகிய சுத்தப்பிரமமென்றுநிச்சயித்துக்கொண்டு நிற்றலால், நாம்பிரமமென்றுகூறத்தலைப்பட்டாருலகரென்பதும், இவர்கள், பசுக்களாகிய தங்களையே பிரமமென்றுகூறுதலால் அவ்வளவுமாத்திரமறிந்த பசுஞானிகளே என்பதும்.* இனி, ஒருபுருஷன் எனக்குமேலொரு கடவுளில்லை நானேபிரமமென்றுகூறிக்கொண்டிருப்பானாகில், அவனுக்கு எப்போதாவதுஒரு கஷ்டம்வந்தால், அதனை எந்தக்கடவுளாவது விலக்கிவிடநினைக்குமா? கஷ்டம் விலக்குமா? † நமக்குமேலொரு கடவுளுண்டென்று வழிபடுகின்றவனுக்கே அக்கடவுளனுக்கிரக முண்டாமன்றிவேறில்லை யென்பதும், ஒருவன் மேலுமேலும் நன்மைபெற்று வாழவேண்டுமானால், அவன், நாம்பிறர் அறிவித்தாலன்றி அறியமாட்டாதசீவனாதலால்,

---

* இதனை, "வேதசாத்திரமிருதி புராணகலைஞானம் விரும்பசபைவைகரியாதித்திறங்கண்மேலா, நாதமுடிவானவெல்லாம் பாசஞானநணுகியான்மாவிலை கீழ்நாடலாலே, காதலினானன் பிரமமென்னு ஞானங்கருது பசுஞானமிவனுடலிற் கட்டுண், டோதியுணர்தொன்றொன்றா வுணர்ந்திடலாற் பசுவாமொன்றாகச்சிவனியல் பினுணர்திடுவன் காணே." என்னுஞ் சித்தாந்த சுருதியாலுங் காண்க.

† மாயாவாதப் பேயாவுனக்குத், தேவரிலொருவருண்டாகி, மேவருநரகம்விடுப்பதேநாவரிதே. என்னுஞ் சித்தாந்த சுருதியாலுங்காணலாம்.

நமக்குள்ளே கலந்து நின்றுணர்த்தி நடத்தியொன்றாய் வேறாயுடனாயிருக்கும் * பசுபதியாகிய பரமசிவனொருவன் அநாதிநித்தியனாயுள்ளவனென்றுள்ளபடி கண்டு வழிபாடுசெய்து அவனருள்பெற்றுவாழவேண்டு மென்பதும், ஒருவன் பிறர்க்கிடர்செய்யும்போது, இது பாவமென்பதில்லை; அதனாற் றுன்பமென்பதுமில்லை; அதனை நமக்குச் சேர்ப்பிக்குங் கடவுளுண்டென்பதுமில்லை; நாமே பிரமம்; நம்மையென் செய்தாயென்று கேட்டுத்தண்டிப்பதற்கு நமக்குமேலொரு கர்த்தா இருந்தால் அல்லவா நாம் அஞ்சவேண்டு மென்பனவாதிய ஞானமிருந்தாற்றான்; அவ்வாறு பிறர்க்கு இடர்செய்யுந் தொழில் நடைபெறுமன்றி, நமக்குமேலொரு கடவுளுண்டு பாவபுண்ணியங்களுண்டு பாவஞ்செய்தால் துன்பம்வருமென்ற அச்சமிருந்தால், அத்தொழில் நடைபெறாதென்பதும் இன்னு மிவைபோல்வன பலவுமே அச்சுக்கிராசாரியருண்மைக் கருத்தென்பது விளக்கமாகும்.

இவையெல்லாம் அவர்கருத்தேயாமென்பது, அவர்முன்பு சூரன் ஐசுவரியாதிகளைப்பெற்று வாழவேண்டிய நிமித்தம், சூரனை நீபரமசிவனையே பரமபதியாகவும் உன்னை அவனடிமையாகவு முள்ளபடி கொண்டு, கொலைகளவு காமாதி துர்ச்செயல்களை நீக்கிஇந்திரியங்களை அடக்கித்தவஞ் செய்வாயாகவென்று போதித்ததனாலும், பின்புதேவர்க்கு இடர்செய்யவேண்டிய நிமித்தம், சூரனை நீசகலைசுவரியமும் வெற்றியும் வீரமும் உள்ளவனாயிருக்கின்றாய்; உனக்கு மேலொன்றுமில்லை; நீயே பிரமம்; பாவபுண்ணியங்களொன்றுமில்லை; கொலை களவு காமமுதலிய எல்லாமும் அவசியஞ்செய்யவேண்டும்; செய்யாவிட்டாலுனக்கொருவரும் பயப்படார்களென்பனவாதியாகப்பலதுர்ப்போதனை செய்ததனாலும் செவ்வே தெரியலாம்.

இவ்வாறு, முதலிற் சுக்கிராசாரியர் சூரனுக்கு, காசிபருபதேசித்த உத்தமோத்தம சுத்தாத்துவித சித்தாந்த மார்க்கத்தையேமேலும்வற்புறுத்தி விளக்கி, நம்மையெல்லாம் ஆளுகின்ற சர்வகர்த்தாவாகிய ஈசநாம பரமபதி ஒருவனுண்டு, அவனே, எல்லாரையும் தன்வசப்படுத்தும் ஆற்றலுள்ள யமனைக்கடந்த உமாபதியாகிய பரமசிவனே;

*"உலகெலாமாகி வேறாயுடனுமாய்" 'ஈறாய்முதலொன்றாயிருபெண்ணாண்குணமூன்றாய், மாறாமறை நான்காய்வரு பூதம் மவையைந்தா யாறார் சுவையேழோசையொ டெட்டுத்திசைதானாய், வேறாயுடனானானிடம் வீழிம்மிழலையே.' என்னுஞ் சுருதிகளாற் காண்க.

அவனுடைய திவ்விய மந்திரமொன் றுபதேசிக்கின்றேன்; நீ இந்திரியங்களை ஒடுக்கி மனசை ஒருவழிப்படுத்தி நின்று, கொலை களவு காமாதி துர்ச்செயல்கள் சிறிதுமில்லாமல் அத்தகைய சிவமந்திரசெபத்துடன் அரிய தவஞ்செய்து பரமசிவானுக்கிரகம்பெற்று வாழ்வாயாகவென்றுள்ளபடி உபதேசித்த வேதசிவாகமாதி சிவசாஸ்திர சம்மதமான சன்மார்க்கத்தை மேற்கொண்டொழுகுதற்குரிய அறிவும் ஆற்றலுமில்லாத சிலர், அச் சுக்கிராசாரியர், அச் சூரனுக்குப்பின்னிகழ வேண்டிய சிவாஞ்ஞையை நோக்கித், தேவர்களுக்குஇடர்செய்யும்படி அவன் மனசை நிலைப்படுத்தி ஏவும்பொருட்டுச் செய்ததுர்ப்போதனையே மேற்கொண்டு, இந்தமார்க்கமே, பாவபுண்ணிய சுவர்க்கநரகாதிகளொன்றுமில்லை, நாம் ஒரு நியமத்துக்குட்கட்டுப்பட்டுக் காயக்கிலேசாதிசெய்து வருந்தவேண்டாது நாமே பிரமமெனக்கொண்டு எப்போதும் இஷ்டம்போல உண்டுறங்கிச் சுகித்துக் களித்துவாழும்படியான மிகவெஃகுவான மார்க்கமென்றுரைத்து நின்றுகளிப்புற்றுச் சுவேச்சையாய்த் திரிதலுமன்றி, இவ்வுளவுதெரியாத பிறரையும் இதுவேலெகுமார்க்கமென்று வலிந்துபோதித்திழுத்து மீளாநரகுக்காளாகின்றார்கள் ஆக்குகின்றார்கள் * ஆக்கினும் அவ்வழியில் அவ்வுளவுதெரிந்த அறிவாளிகள் செல்லார்கள். இவ்வுளவுகளெல்லாம் ஊகித்துணரமாட்டாதவர்கள், யானைவீழ் படுகுழிபோன்று வெளியேவிளக்கும் விபூதி ருத்திராக்ஷாதி வேடங்கண்டுண்மையென்று நம்பிச்சென்று இப்பாழ்ங்குழியில் வீழ்ந்து கரையேற வகையறியாது ஏற்றுவாருமின்றி நீங்காத்துன்புறுமற்; காசிபருபதேசித்த உண்மைதெரிந்து அவ்வழி நின்றுய்ந்திடேறும்படி ஸ்ரீகணேசஸ்கந்த சாம்பபரமேசுரசரணாரவிந்தங்களைப் பணிந்து பிரார்த்திக்கின்றேன்.

தாமின்புறு வதுலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந்தார்.

ஆகலால் அறிவிற்சிறந்த பெரியார்யாவரும் இவ்வுண்மையேஉலகர்க்குபதேசித்துச் சுத்தாத்துவித சித்தாந்திகளாகவே வாழச்செய்யும்படி அப்பெரியார் திருவடிகளையும் சிரமேற்கொண்டு பிரார்த்திக்கின்றேன்.

உபதேசத்திரயம் முற்றிற்று.

---

* இதனை, மேவருநரகம் விடுப்பதோவரிதே, என்ற சித்தாந்த சுருதியானுந்தெளிக.

உ

ஶ்ரீஶிவாப்யாம் நம:

ஶ்ரீகுருப்யோ நம:

ஶ்ரீஸ்காந்தே மஹாபுராணே ஶங்கரஸம்ஹிதாயாம்
ஆஸுரகாண்டே ப்ரதமாத்யாயே வக்ஷ்யமாணஶ்லோகா: |

|| காஶ்யப: ||

த்ரிபதார்த்தஸ்ய விஜ்ஞானம் ஸம்பாத்யம் ஸததாநகா: |
விஜ்ஞாநேந ஶிவப்ராப்திர்பவேத் ஸுகரூபிணீ ||

இந்தச்சுலோகம், சூரன்முதலிய புத்திரர்கள், ஆதியில் தங்கள் பிதாவாகிய காசிபரை வணங்கி, நாங்கள் செய்யத்தக்கதென்னென்று கேட்டுக்கொண்டபோது, காசிபர், அவர்களுக்குச் சன்மார்க்கத்தை உபதேசிக்குங்கருத்தினராய்க்கூறியது. இதன்பொருள்.

அனகர்களாகிய புத்திரர்களே, எப்போதும் (பதிபசுபாசங்களாகிய) திரிபதார்த்த விஞ்ஞானமே சம்பாதிக்கத்தக்கது. அந்த ஞானத்தினாலே தான் சுகரூபிணியான சிவப்பிராப்தி அடையத்தக்கதென்பதாம்.

இது முதலாகப் பலசுலோகங்களாற் சைவசித்தாந்தோபதேசஞ் செய்தார். விரிவுமாதலால், நண்டு முக்கியமாகத் தெரியவேண்டிய திரிபதார்த்த விஞ்ஞான சுலோகமாத்திரம் எடுத்துக்காட்டப்பெற்றது.

இத்யுக்தவாநயமாஸ்யாயம் பாதயோரபிவந்தநம் |
க்ருத்வாஸுரவரோ ப்ராக் ச விநயேநாநத: ஸ்தித: || (௨௫)

ஶுக்ரோபி தத்வயுக்தாய ஶிவமந்த்ரம் ததாவ்யயம் |
யாகவிக்நவிநாஶார்த்தம் ஸோபி தத்க்ஷணாத்கத: || (௨௬)

இந்தச் சுலோகங்கள், சூரன் மாயைசொற்படி யாகஞ்செய்யச் செல்லுங்கால், சுக்கிராசாரியரை அடுத்து வணங்கிச்சிவமந்திரோபதேசம்பெற்றதை விளக்குவன.

இவற்றின்பொருள். இவ்வாறுகூறிய அசுரசிரேஷ்டனான சூரன், இந்தச் சுக்கிராசாரியர் பாதங்களில் வந்தனஞ்செய்து பின்பு விநயத்துடன் தலைகுனிந்திருந்தான். அப்போது சுக்கிராசாரியரும் அவனுக்கு யாகவிக்கின நிவிர்த்தியின் பொருட்டுச் சிவமந்திரத்தை உபதேசித்து உடனே அவ்விடம்விட்டுச் சென்றாரென்பதாம்.

மந்திரோபதேசஞ்செய்யும் ஆசாரியர்கள், அதை அநுட்டிக்க வேண்டியமுறையும் உடன் கூறுவது சுருதியுக்தி அனுபவவிளக்கமாதலால், ஈண்டுச்சுக்கிராசாரியர் உபதேசித்தமுறைப்படி அனுட்டிக்க வேண்டிய விதிக்கிரமமுங் கூறினரென்பதைத், தமிழ்க்கந்தபுராணசிரியர் விளக்கிக்காட்டினரென்க.

காஶ்யபஸ்த்வித்தம் ஸஞ்சிந்த்ய தேவாநாம் விபதம் ததா ।
பீதவாநிவ யுஷ்மத்குலாசார்யஸமீபதஸ்து ॥ (உகூ)
ஶ்ரோதவ்யம் புத்திரித்யேவம் த்வரிதோ விஜ்ஞாபிதம் ।
ஸஹஸைவ ததஸ்ஸர்வே ஸம்பூயாஸுரஸத்தமா: ॥ (கூ0)
ஹாதகஸுகேஶ பூமியோக்ஷேமஸர்வஶாஸ்த்ரகோவிதம் ।
நத்வா பார்க்கவம் ப்ராஞ்சலய: தம் வ்யஜிஜ்ஞபந் । (கூக)
வாசம் ப்ராஹ்மணஶ்ரேஷ்ட காஶ்யபோ ஸோ(அ)பி லீலயா
இத்யாஜ்ஞாபயாமாஸ ஸம்பூஜ்ய பதிதஸ்ததா ॥ (கூஉ)

இந்தச்சுலோகங்கள், சூரன், சுக்கிராசாரியரிடத்து, முன்பு சிவமந்திரோபதேசம் பெற்றுச்சென்று வீரயாகஞ்செய்து பரமசிவனிடத்தில், அளவில்லாதவரங்களைப்பெற்று, மகைசுவரியவானாய் மகாபெலாட்டியனாய், அரிப்பிரமேந்திராதிகளுக்குமேலான அதிகாரஸ்தனாய் வந்தபின்னும், உத்தமசத்துவகுணத்தையே மேற்கொண்டு, தன்பிதாவினிடத்துவந்து வணங்கிநின்று, தாங்கள் மாயைசொற்படி யாகஞ்செய்ததும் பரமசிவன்வந்து கேட்டவரங்களெல்லாந்தந்ததும் உள்ளபடிகூறி, இனி அடியேங்கள் செய்யத்தக்கதின்னதென்று தெரிவித்தருளுகவென்று விண்ணப்பிக்க, அது கேட்டகாசிபமுனிவர், பின்புநிகழ்வனவற்றை நன்று சிந்தித்து, அச்சூரனைச், சுக்கிராசாரியர் சொற்படி செய்கவென்று அனுப்ப, அவன் அவரிடஞ்சென்று தெரிவித்தமையை விளக்குவன.

இச்சுலோகங்களின்பொருள், காசிபர், (தம்மிடம் வந்து சூரன் நிகழ்ந்தனகூறிய) அவ்விதத்தினுமே, (இனித்தேவர்களுக்குவரும் விபத்தை) நன்முகச்சிந்தித்துத் தமது தம்பாவிக்கினத்துக்குப்பயந்தவர்போல (மைந்தர்களே சுக்கிராசாரியராகிய) உங்கள் குலகுருவின்சமீபத்தையடைந்து, (உங்களால் அவர்கூறும்) புத்திகேட்கத்தக்கதென்று விரைந்துகூறினர். பின்பு உடனே அசுரசிரேஷ்டர்யாவரும் ஒருங்குகூடித், தங்களுக்குவரும் க்ஷேமத்தில் ஊக்கமுள்ளவரும், சர்வசாஸ்திரார்த்தபண்டிதருமாகிய சுக்கிராசாரியரையடைந்து வணங்கி அஞ்ச

வித்துநின்று, (தாங்கள் யாகஞ்செய்து மிகுவரம்பெற்றுக்காசிபரிடஞ் சென்றுதெரிவித்து இனிச்செய்வதென்னென்றுகேட்டதும் அவர்கூறியதுமாகிய) விருத்தாந்தத்தைக்கூறி (எங்கள்) ஆசாரியரே! காரியாகாரியவிவரணபுத்தியை (எங்களுக்குச்) சீக்கிரஞ்சொல்லியருளுகவென்றுகூறி மேலும் வணங்கிச்சூழ்ந்துநின்றார்களென்பதாம்.

இதுவரை, சூரன்புத்தி சன்மார்க்கத்திலேயே உறைத்துநிற்றலை அவன் பிதாவிடத்துங்குருவிடத்துங்கூறியவைகளே தெளியவிளக்குகின்றன. இவ்வாறு சன்மார்க்கத்துறைத்துநின்ற சூரனுக்கு இனிச் சுக்கிராசாரியர்துர்ப்புத்தியுபதேசிக்கின்றார். அது பின்வருஞ்சுலோகங்களாற்காண்க. அவ்வுபதேசத்தால் அச்சூரன்கொண்ட கொள்கை, நானேபிரமம். எவ்விதபாவஞ்செய்யினும் என்னைவந்துபற்றாதென்று துணிந்து தேவர்க்கிடர்செய்ததேயாம். இதனைவிளக்கும் அத்தியாயத்துக்குப்பேர், சுக்கிரர் சூரனுக்குத்துர்ப்புத்தியுபதேசமென்று வடமொழிக்கந்தபுராணங்கூறுதலாலும் நன்குதெளியலாம். இதுவே, நான்பிரமமென்பார் கொள்கை,

शाक्तस्य श्रवणान्मोक्षैकान्तेनायसः । (௩௩)
उपायापाया पापायोर्दृष्टादृष्टानवियायिनीं ।
शिवस्य मायामात्रत्वं सकलं वियदादिकम् (௩௪)
तथा स्वांशं विसृज्याथ जीवश्चैव नावतिष्ठते ।
शरीरेन्द्रियसंयुक्तः श्रीमातत्त्वयोजनः ॥ (௩௫)
हन्ता वध्यो वधाकारो मोहाकारोऽवधीयते ।
तद्देहविनाशेन जीवस्य शिवतां गतः ॥ (௩௬)
तस्मात् पुण्यानि पापानि क्रियाश्च पाणिसत्त्वतः ।
लोकेषा व्यवस्था तत्त्वसाधनं ब्रह्मविष्णोः ॥ ()
मोक्षशोकं विमृश्याय ब्रह्मविष्ण्वादिदेवताः ।
वसिष्ठ्याः हृद्यायन्तु सद्भावसाम्यं ॥ (௩௮)
इन्द्रादिदेवतानां च यज्ञस्वाध्याय संग्रहे ।
तेषां वधं प्रयुक्तं सर्वत्राणां महाजनां ॥ (௩௯)
मारणं च तथा कामं परस्त्रीविवर्जनम् ।
प्रदेशेणदेशेऽपि तथा गुरुः ॥ (௪௰)

கூந்யஶா ஸ்வாம் நமணயெசுகொவிகெதுஷ்வுரொவிவா ॥ (சச)

இந்தச்சுலோகங்கள், சுக்கிராசாரியர் சூரனுக்குத்துர்ப்புத்தியுபதேசித்ததை விளக்குவன. இவற்றின்பொருள்.

சூரன்முதலியர் சுக்கிராசாரியரைவணங்கிச் சூழ்ந்துநின்ற அப்போது வாசாலகரானசுக்கிரரும், (சிங்கமுகாசுரன்முதலியரை அங்கேநிறுத்திவிட்டு)சூரனைமாத்திரம் தனிமையாக ஏகாந்தஸ்தானத்தில் அழைத்துக்கொண்டுசென்று,(பாவபுண்ணியானுகுணமான லோகாந்தரபலனுண்மைகூறுஞ் சிவசாஸ்திரமார்க்கத்தை நிராகரித்துவிட்டு) நேரேகாணப்படுகின்ற (இம்மையனுபவத்தையே உண்மைபோலக்காட்டும் வார்த்தைகளைக்கூறத்தொடங்கினார். (சிவசாஸ்திரங்களின் உண்மையைமறைத்துத், துர்ப்புத்தியையே உண்மையாகமேற்கொள்ளும்படி வாக்குசாதுரியத்தாற்போதிக்கின்றாராதலால். அந்த உள்ளீடு நோக்கியே, அவரை வாசாலகரான சுக்கிராசாரியரென்று அவ்வடமொழி கூறியதென்க. அன்றியுந்தனித்தழைத்துபதேசித்ததும் அவ்வஞ்சனையைவிளக்கும்.)

(கூறத்தொடங்கியசுக்கிரர், சூரனைநோக்கி) சிவனே மாயையை) ஆசிரயித்து, ஆகாசமுதலிய (பூதங்களைச்) சிருட்டித்துப் பின்பு அவ்வாறே தன்னுடைய அம்ஸத்தைப்பகுத்துச் சரீர இந்திரியங்களுடன்கூட ஜீவத்தன்மையினால் விளங்குகின்றான். இப்படிச்செய்து விளங்குவதின் பிரயோசனம் விளையாட்டினளவேயன்றிவேறில்லை. குடம் உடைந்தபின், (அந்தக்)குடாகாசம் மகாகாசத்தில் எப்படிலயமாகிறதோ அப்படியே, தேகம் நீங்கியபின் சீவன் சிவத்தன்மையை அடைகிறான். ஆனதால், (புண்ணியம் நன்மையென்றுசெய்தலும், பாவம் தீமையென்று செய்யாதொழிதலும்வேண்டாம்) அப்புண்ணியபாவங்களெல்லாம் (பொய்யே)மித்தியாரூபங்களே. இதுவேசத்தியவசனம். (இனிமுடிவாகக்கூறும்)மோக்ஷமும் இப்படியே (பொய்யே.) ஆதலால், நீ, உனது ஆத்மாவைப்பிர்மரூபியாக நினைத்துத்துக்கத்தைவிட்டுவிடு. பின்பு பிரமவிஷ்ணுவாதிதேவர்களை நீக்கிவிட்டு இருதயத்தில். ஆகாசமத்திய சம்புவைத்தியானித்துக்கொண்டு இந்திராதிதேவர் (பாவர்க்கும்) மிகுந்தபயத்தைச்செய்து, அவர்கள் (வசிக்கும்) பதவிகளையெல்லாம் மகாசத்திமான்களாகிய அசுரர்களுக்குக் கொடுத்துவிடு. (அத்தேவர்கள் உங்களுக்குப்பகைவர்கள்) அவர்களுக்குமரணத்தைச் (செய்) வஞ்சகம், திருட்டுத்தனம், கலகமுதலியவைகளைப் (பாவமென்று நீக்கிவிடாமற்)செய். இவையெல்லாம் நீ செய்யாவிட்டால், மனிதனோ தேவனோ ஒருவனும் உன்னை ஒருபொருளாக மதிக்கமாட்டான் என்பதாம்.

முற்றிற்று.